உ

பரமபதி துணை.

யாகோபு திருவாய்மலர்ந்தருளிய

# பஞ்சபூதச் சரக்குகளின்

# பஞ்சமித்திரம் 300.


மதுரை யானைக்கல் தெரு வித்வான்

மூ. குழந்தைவேலுப்பிள்ளை அவர்கள்

கேட்டுக் கொண்டபடி,

மதுரை, வித்வான்

த. குப்புசாமி நாயுடு அவர்களால்

பார்வையிட்டபடி



மதுரை, புதுமண்டபம், புத்தகசாலை

ஜி. இராமசாமிக்கோன்

இ. ராம. குருசாமிக்கோனார் சன்

அவர்களாற்றமது

மதுரை வடக்குமாசிவீதி, குருசாமிக்கோனார்தெரு,

ஸ்ரீ ராமச்சந்திர விலாசம் பிரஸில்

பதிப்பிக்கப் பெற்றது





காப்பி 750. **1955** இரண்டாம் பதிப்பு.

உ

பரமபதி துணை.

### யாகோபு திருவாய் மலர்ந்தருளிய

## பஞ்சபூதச்சரக்குகளின்

# பஞ்சமித்திரம் 300.

---

எல்லாமும் படைத்ததொரு அல்லாவைத்தான்
இணையடியைப் போற்றியே தெண்டனிட்டு
பொல்லாமை யில்லாத நபிமார்பாதம்
போற்றியே அனுதினமுந் துதித்துயானும்
கல்லான யிமானை நெஞ்சில்வைத்துக்
கருத்தாணி முன்னூறுங் கணக்கதாக
நல்லறிவா யெல்லாமும் பாடித்தேர்ந்து
நலமாக முன்னூறாய் நாடினேனே. (1)

நாடினேன் களங்கோடு செந்தூரந்தான்
நலமான மித்திரத்தின் செயலுங்கண்டு
கூடினேன் சத்துவகை உருக்கும்பாகம்
குணமான சரஉலையின் செய்கைபாகம்
வாடியே சத்துவகை செம்பெடுக்கும்
வளமான உலைபோடும் வண்மைபாகம்
ஆடினேன் பஞ்சமித் திரத்தின் சேதி
அடைவாகக் கண்டுநான் பாடினேனே. (2)

பாடினேன் அறுநூறுஞ் சுண்ணக்காண்டம்
பதிவாக அதையடக்கி யிதிலேகொஞ்சம்
கூடினேன் குகைமித்திரம் தங்கமித்திரம்
கொடுக்கின்ற பாகமொடு குணமாய்ச் சொல்வேன்
வாடியே திரியாதே யென்னாலெல்லாம்
வகைகண்டு பார்த்திட்டு மனதிலெண்ணித்
தேடியே யெடுத்துமே செய்தாரானால்
திடமாக மனாநபியா யிருப்பார்தானே. (3)

இருப்பார்கள் மக்கத்தில் நபிகள்ரெம்ப
யின்பமுற்று ஒருவருக்குஞ் சொல்லார்பாரு
வெறுப்பாகப் பேசிடுவா ரவர்கள்முன்னே
விரும்பியே நீநிற்க வேண்டாம்பின்னே
முருப்பாக மனமிரங்கி வேலைசெய்தால்
முக்கியமாய்ச் சொல்லிடுவார் முற்றும்பாரு
வருப்பாக யிப்படிக்கு வேலைசெய்து
வண்மையாய்க் கண்டேனுன் யாகோபுநானே. (4)

நானுக மக்காவில் இருந்தபோது
நாடினேன் யென்பேரு ராமதேவர்
போனேநான் மக்காவின் தேசந்தன்னில்
புகலறிய பதினாறு படியிலேறிக்
கோனான நபிமார்கள் புத்திசொன்னார்
குணப்பட்டுச் சுண்ணத்துச் செய்துகொண்டேன்
வானுக நபிமார்கள் யாகோபென்றார்
வடிவாக வெகுகாலம் வாழ்ந்திட்டேனே. (5)

நூல் தொகுப்பு.

வாழ்ந்திட்டேன் நபிமார்கள் வாதஞ்சொன்னார்
வடிவான வாதத்தை மனதிலுன்னி
தாழ்ந்திட்டுப் போகாமல் சாத்திரங்கள்
தாட்டிகமாய் வயித்தியர்கள் பிழைக்கவேண்டி
பாழ்ந்துமே யெழுநூறு பாடிப்பின்பு
பதிவாக அதைச்சுருக்கி ரெண்டுமுன்னூறு
காழ்ந்துமே அதைச்சுருக்கி ஐம்பத்தைந்து
கனிவாகப் பதினாருய்க் கருதினேனே. (6)

கருதினே னதுவெல்லாம் பானையாகும்
கனிவாக யிந்தநூல் முன்னூறுதானும்
பருதியே தடியாகும் பார்த்துக்கொள்ளு
பலபலவா யோசனைகள் பண்ணவேண்டாம்
உருதியா யிந்தநூல் முன்னூறுதன்னை
உழைத்துமே முன்னூலை ஒத்துப்பார்த்து
வருதிபெறச் செய்தாக்கால் வாதமாகும்
வகைபறியார்க் கொன்றுமில்லை உண்மைதானே. (7)

உண்மையா யேருழுது பயிர்நட்டாப்போல
உருதிபெறுஞ் சத்துதனிற் செம்பெடுக்க
வண்மையாய் வாழைவைத்துப் பலன்கொடுத்த
வரிசையொக்கும் பொன்செய்வோர் மார்க்கமாகும்
தண்மையாய் வெள்ளைறால் தனக்குச்சாயம்
தாக்கியதோர் வரிசையொக்குந் தங்கமாகும்
பெண்ணவளுங் கருத்தரித்த வாறுபோலாம்
புகலரிய ரசவாதம் பேணிப்பாரே. (8)

துருசு சத்து கேந்திச்செம்பு.

பேணியே யின்னமொரு சத்துக்கேளு
பேசரிது பேசுகிறேன் யிந்தனூலில்
காணியாந் துருசியது பலமோபத்து
கனிவாகக் கல்வத்தில் பொடித்துமாப்போல்
வாணியாய்ப் புதுச்சட்டி தன்னிலிட்டு
வகையாக அடுப்பேற்றி யெரித்துச்சாமம்
தாணியாய் நீரதுவும் வற்றிப்போகுந்
தந்தம்போல் வெள்ளைநிற மாகுந்தானே. (9)

ஆகுமே நீறினதோர் துருசுக்குத்தான்
அடைவாக ஓட்டிரெட்டி பரையினுதம்
வேகுமே அதிலிட்டுக் கல்வமிட்டு
விரும்பியே பழச்சாறு மூன்றுநாளும்
பாகுபெற விட்டரைத்து வில்லைகட்டிப்
பதிவாகக் கதிரில்வைத்துச் சொல்லக்கேளு
தாகுமே சுண்ணும்பு உப்புநேரே
தாட்டிகமாய் மேனிச்சார் விட்டுஆட்டே. 10)

உப்புக் கட்டு.

ஆட்டியே புடம்போடத் தெரிப்படங்கும்
அதையரைத்து முன்னீரா முன்வில்லைக்கு
வாட்டியே கட்டிவிடு உடனேதானே
வகையாகப் புடமிட்டு யெடுத்துக்கேளு
நாட்டியே மேலங்கி தள்ளிப்பாரு
நலமாகக் கரிபோலே தூளாய்நிற்கும்
காட்டியே புதுக்குகையி விட்டுநீயும்
கனிவாக உருக்கிடவே சத்துமாமே. (11)

சத்துநிறம் வெங்கலம்போற் றகர்ந்துகாணும்
சரியான சத்துத்தான் செம்பதாக
மூத்துப்போ விருக்கின்ற சத்திற்பாதி
முனையான சுட்டரைத்தான் தாக்கியிட்டு
பத்துமே பாணிவிட்டுப் பதியஆட்டிப்
பலனாக வில்லைகட்டிக் கதிரில்வைத்து
சித்திபெற முன்கவசம் போட்டுநீயும்
சிறப்பாகப் புடமிட்டு யெடுத்துப்பாரே. (12)

எடுத்திடவே கருப்பாகும் யேங்கவேண்டாம்
இதமாகத் தராசுதனில் தூக்கிவைத்து
அடுத்திடவே டங்கணமுஞ் சரியதாக
அதைநீற்றி ரெண்டாகப் பிரித்துநீயும்
குடுத்துஅதைச் செவ்வல்லிப் பூச்சாற்றாலே
குணமாக அரைத்துவில்லை காயவைத்து
படுத்துமே ஓட்டிவிட்டுப் புடமுமிட்டுப்
பதிவாக யெடுத்துமே கல்வமிட்டே. (13)

குகை,

இட்டுமே பின்புசர் தாணிசேர்த்து
இதமாக முன்பூவா லரைத்துக்கொண்டு
பட்டுமே முன்போலே புடத்தைப்போடு
பதியவே வில்லையது சிவப்புமேறும்
கட்டுமே எடுத்துப்பின் குகையைக்கேளு
நலமான குகையெடுத்து வைத்துக்கொண்டு
கட்டுமே கரியரைத்தே துணியிலிட்டுக்
கனிவாகப் பாணியதால் தடவக்கேளே. (14)

தடவியே குகைக்குள்ளே பத்துச்சீலை
தடையறவே செய்துபின் கதிரில்வைத்து
அடவியே முன்போட்ட மருந்துதன்னை
அதில்வைத்து உருக்கிடவே செம்புமாகும்
சுடவியே சுந்தாணி சேர்த்ததெல்லாம்
கனிவாக யிப்படிக்குக் குகையில்வைத்து
அடவியே உருக்கிட்டாற் செம்பெடுக்கப்
பதிவாக வந்துவிடும் பாகமாமே. (15)

பாகமா யிப்படிக்குக் குகையில்லாமல்
பதிவாக வெருங்குகையில் வைத்துருக்கில்
யோகமாய்க் குகையதுவும் உருகிப்போகும்
உறுதிபெறச் செம்பதுவுந் தீய்ந்துபோகும்
தாகமாய்த் தவித்திட்டு மனம்புண்ணாகித்
தாட்டிகமாய்ச் செம்பெல்லாம் பொய்யதாகும்
பூகமா யின்னூலைப் பொய்யென்பார்கள்
உலுத்தரவர் சண்டாளர் உறுதிதானே. (16)

உருகியாய் முன்னெடுத்த கெந்திச்செம்பை
உத்துமே வெள்ளிதனை யூதிக்கொண்டு
யுருகிபோல் ஊதினதோர் வெள்ளிநாலு
பதிவாக முன்னெடுத்த செம்புமூன்று
கருகியே சேர்த்துருக்க மூன்றுமாத்து
கனிவாகத் தங்கமதை யிடையேசேர்க்க
கருகியே மாத்தேழு காணும்நல்லாய்
நலமாக வித்துமே செலவுசெய்யே. (17)

அயச் சேம்பு.

செய்தபின்பு முன்னெடுத்த கெந்திச்செம்பை
செயமாக அயச்செம்பாய்ச் சொல்லக்கேளு
பைதுமே செம்பிடைக்கு அரபொடியைவாங்கிப்
பதிவாகப் பழச்சாற்றில் திரிநாளூற
நைதுமே கழுவியதைப் பின்புநீயும்
நலமாகக் காயவைத்துச் சொல்லக்கேளு
வைதுமே புதுக்குகையில் பாதியிட்டு
வடிவான செம்பொடித்து அதின்மேல்வையே. (18)

வைத்துமே அரபொடியை மேலேவைத்து
வடிவாக உலையில்வைத்து உருக்கித்திரு
நைத்துமே புட்டுப்போ லுருக்கிக்கொட்டி
நலமான கல்வத்தி லுடைத்துநீயும்
நைத்துமே ரெண்டுக்கு முக்கால்நாதம்
நாடியே வைத்துடைத்துப் பூச்சார்விட்டு
வைத்துமே அரைத்துவில்லை கதிரில்வைத்துக்
கனமாக முன்கவசம் கனக்காய்ச்செய்யே. (19)

செய்துமே உடனே தான் புடமுமிட்டுச்
செயம்பெறவே புதுக்குகையி லிட்டுநீயும்
பைதுமே பக்குவமா யுருக்கித்திரு
பதிவாகச் சத்துநின்று உருகும்பாரு
கைதுமே கல்வத்தி லிட்டுநீயும்
கனமான சத்திடைசந் தாணிகூட்டி
வைதுமே அரைத்துநீ மூன்குகையிலிட்டு
வகையாக உருக்கிட்டு வாங்கிப்பாரே. (20)

வாங்கிடவே அயக்கசடு கழிந்துபோகும்
வகையாகக் கல்வத்தி லிட்டுநீயும்
தாங்கிடவே பாதியெடு சுடரைந்தானும்
தாட்டிகமாய்ச் செவ்வல்லிப் பூச்சாறூட்டி
யாங்கிடவே வில்லைகட்டிக் கதிரில்வைத்து
பதிவாகப் புடம்போட்டு யெடுத்துப்பாரு
சாங்கமாய்ச் சந்தாணி நேராய்க்கூட்டிச்
சரியாக அரைத்துவில்லை கதிரில்வையே. (21)

உலை.

கதிரில்வைத்துப் புடம்போட்டு யெடுத்துக்கொண்டு
கனிவாக உருக்கசர உலையைக்கேளு
பதிவான அரைச்சாணி னகலமாக
பார்த்துநீ குளிதோண்டி சாணுநீளம்
விதியான குகையெடுத்து மட்டுப்பார்த்து
விதமாகப் பொத்தலிடு நுனிவிரலதாக
சதியாக அஞ்சுபொத்த லிட்டுநீயும்
தாட்டிகமாய்ப் புடம்போட்டு மருந்துவையே. (22)

மருந்துவைத்து மூன்குழியில் வைத்துநீயும்
மயமாகச் சதுரக்கல் காலுவைத்து
அருந்துமே காளம்வைத்து ஊதுநல்லாய்
அதுஉருகி மணிமணியா யிறங்கும்பாரு
கருந்துமே மணியெடுத்து உடைத்துப்பார்த்து
நலமான செம்பெல்லாம் பொருக்கிநீயும்
வருந்துமே புதுக்குகையி லிட்டுநீயும்
வடிவாகக் காரமிட்டு உருக்கிடாயே. (23)

## பஞ்சமித்திரம்.

உருக்கிடவே ரவியாகும் சிவப்புமெத்த
உறுதிபெறக் கல்மிசத்தை விலக்கக்கேளு
நருக்கிடவே அயச்செம்பி லிருக்குகின்ற
நலமான பஞ்சமித்திரம் நாடிக்கேளு
வருக்கிடவே படிகாரம் வெங்காரந்தான்
வளமான சாரமொடு யிந்துப்புந்தான்
தருக்கிடவே வளையலுப்பு அஞ்சும்நேராய்
தடையறவே தேனதனி லரைத்துக்கேளே. (24)

அரைத்துமே குழம்பாக்கி வைத்துக்கொண்டு
ஆதியாம் அகலிலிட்டுச் சொல்லக்கேளு
பரைத்துமே மூன்குழியி லடியில்வைத்துப்
பதிவாகக் குகையிலிட்டு அயச்செம்பைத்தான்
நரைக்கவே நாளம்வைத்து ஊதித்தீரு
நலமாக உருகியது மீறிறங்கும்
கரைக்கவே மணிமணியா யிறங்கிநிற்கும்
கனகம்போல் நிறமாகுங் கண்டுகொள்ளே. (25)

கண்டுமே யிப்படிக்குப் பாகமாகக்
கருவை வைத்துச் செய்துவிடு கனகம்போலாம்
பண்டுமே யிச்செம்பு நிறத்தைக்கேளு
பதிவான சூரியன்போல் நிறமுமாகும்
துண்டுமே அயச்செம்பாம் ரெண்டெடுத்துத்
துடியான வெள்ளியெட்டி லீய்ந்தாற்கேளு
வண்டுமே உருகியது மாத்துஆறு
வடிவான தங்கமதை யிடையேசேரே. (26)

இடைசேர்த்துத் தகடடித்து உரைத்துப்பாரு
யிதமாக மாற்றெட்டு நன்றாய்த்தோணும்
கடைபார்த்து வித்துமே செலவுசெய்து
கனிவான புடமிறங்குங் கண்டுகொள்ளு
தடையடா யிவ்வேலை நிசமதாகும்
தனித்துமே மனதுதனில் உன்னிப்பாரு
விடையாகும் யாகோபு சொன்னநீதி
வெற்றிபெற வைத்துமே விரும்பிப்பாரே. (27)

அயச்செம்பு செந்தூரம்.

விரும்பியே அயச்செம்பு பலமுமொன்று
விதமான தங்கமொரு யிடையேசேர்த்து
அரும்பியே உருக்கியடி தகடதாக
ஆண்மையாய் ரெண்டுக்கு மூக்கால்கெந்தி
கரும்பியே ரெண்டுக்குக் காலாம்வீரம்
கனிவான செவ்வல்லிப் பூச்சாறுட்டி
தரும்பியே தகட்டுக்குப் பூசிப்பூசித்
தாட்டிகமாய்ப் புடம்போடக் கரியுமாமே. (28)

கரியென்று மயங்காமல் கல்வத்திட்டுக்
கனிவான சுடரைத்தான் பாதிசேர்த்து
வரிபாலை விட்டரைத்து வில்லைதட்டி
வண்மைபெறப் புடம்ரெண்டு போட்டுப்பாரு
துரிதமாய் வில்லையது சிவந்துபோகும்
சுகமாகப் பின்புதான் பொன்னுருக்கும்
அரியாயோ சேர்த்தரைத்துப் பூச்சாற்றாலே
அடைவாக வில்லைதட்டிப் புடத்தைப்போடே. (29)

புடம்போட்டு யெடுத்துப்பார் முருக்கம்பூப்போல்
புகழாக யிருந்திடுங்காண் பிலக்கஓடும்
தடமிட்ட நபிமார்க ளாடுமாட்டக்
தான்கண்டு உலகமதில் நம்பிச்சொன்னேன்
கடமிட்ட ஆறுபோல் வாதவெள்ளங்
கணக்கிட்டுச் சொல்லவே முடியாபாரு
தடமிட்டு நாள்பார்த்து உலகத்தோர்க்குத்
தடையறவே யெழுதினேன் யாகோபுநானே. (30)

நானென்று செந்தூரந் தனையெடுத்து
நாட்டிலே சொல்லாமற் சொல்லக்கேளு
வானென்று மதியிருபத் தைந்துருக்கி
மாசற்ற செந்தூரம் ஒன்றுதாக்கு
காணென்ற மாத்தென்ன யெட்டேகாலாம்
காவிக்கும் உப்புக்குங் கனமாய்நிற்கும்
ஊனொன்று விற்றுமே செலவுசெய்து
உறுதியா யிரதவித்தை தன்னைப்பாரே. (31)

தன்னையே பார்த்திடவே கெந்திச்செம்பு
தனைச்சொல்லிப் பின்புதான் அயத்தின்செம்பு
சன்னையாய்ச் சொல்லிவிட்டேன் பின்புதானும்
சரியான தங்கச்செந் தூரஞ்சொன்னேன்
கன்னல்போல் சத்தெடுத்துப் பிரிக்கும்பாகம்
கனிவாகக் கண்டுமே பிரித்துக்கொள்ளு
இன்னபடி சாஸ்திரங்கள் ஒதித்திரு
இடும்பாகச் சொல்லாதே யின்பம்பாரே. (32)

இன்பமுற்று யின்னூலை அழுத்திநீயும்
யிதமான விருத்தியெல்லா மனதிலெண்ணி
துன்பமறச் சத்துவகை செய்துகொண்டு
துருசறவே செம்பெடுத்து மதியிற்சேரு
முன்பூவை நினைத்துமே துருசிற்சேர்த்து
முக்கியமாய்ச் சத்துவகை முடித்துநீயும்
அன்பாய்த் திரிந்துமே சீவனத்தை
அடைவாகச் செய்திடயா கோப்சொன்னாரே. (33)

சொன்னதொரு பாகம்போற் செய்துகொள்ளு
சுகமாகச் செய்யாட்டால் பொன்னுமில்லை
நன்னயமாய்க் கொட்டிறுற் றேளையாகும்
நலமாகக் கொட்டாட்டாற் பிள்ளைப்பூச்சி
இன்னிலத்தில் சத்தெடுத்தால் பொன்னேயாகும்
இல்லாட்டால் கழுதையவன் மேய்ப்பான்பாரு
கன்னலாய்க் கேட்டேனென் றெண்ணவேண்டாம்
கனிந்துமே முன்வேலை கருதிப்பாரே. (34)

கருதியே பயிரிட்டு உண்டுதேரு
களிப்பாக யில்லறத்தில் கனிந்துவாழு
உருதியாய் உங்களுக்குப் புத்திசொன்னேன்
உற்றுமே வாதந்தான் மிகவும்பார்த்தேன்
நருதியே யென்றுசொல்லி உலகந்தன்னில்
நாடியே சொல்லாதே சிரிப்பாரப்பா
வருதியே பாகம்வந்தா லெல்லாமாகும்
வகையாக யாகோபு வசனித்தேனே. (35)

வசனித்தேன் யென்றைக்கு மிருக்கமாட்டார்
வடிவாக ஒருநாளில் மடிந்துபோவார்
தசனியா யிப்படிக்கு யிருக்கவென்றால்
தடையறவே ஒருவேலை செய்துகொள்வாய்
பிசகாமல் ரசவாதம் யேவலாகும்
பிரியமா யுண்டுடுத்தி வாழ்வார்காணும்
நசலாகத் திரிந்தாக்கா லாபமென்ன
நானறிந்த மட்டுக்கும் தான்சொன்னேனே. (36)

சொன்னதொரு அயச்செம்பை வைத்துக்கொண்டால்
சுருதிமுதல் நால்வேதம் வந்துநிற்கும்
நன்னயமா யுலகத்தோர் நம்புவார்கள்
நாடுதனில் நபிமாராய்த் திரியலாகும்
சின்னமில்லை யெல்லாமுஞ் சித்தியாகும்
சித்திபெற்று சமாதிக்கு ளிருக்கலாகும்
முன்னமே சொன்னபடி போலேபாரு
முனையான யாகோபு மொழிந்தார்தானே. (37)

மொழிந்திட்ட நபிமார்க ளாடுமாட்டை
முடியமட்டுங் கண்டுமே சோதித்தேறு
வழிந்துமே யோகாமல் பாகத்தோடே
வடிவாகச் செய்துமே வைத்துக்கொண்டு
கழிந்துமே நபிபோலே தியானம்பண்ணு
கருதியே கர்த்தாவைப் பணிந்துபோற்றி
தழிந்துமே நன்மார்க்க மாகப்பேசு
தாட்டிகமா யாகோபு சொன்னவாறே. (38)

வாறுகேள் சிறிதுபேர் வாதிமார்கள்
வகையான மட்டங்கள் தெரியாதாலே
காறுமே மூலிகையிற் செம்பைத்தானும்
கனமாக உருக்கியே சாய்த்துச்சாய்த்து
பாறலகில் வெள்ளிதனில் கொடுத்துருக்கி
பார்த்திட்டு மாத்தாறு கண்டுதென்பார்
சோறுபோல் நினைத்துமே யேங்கியேங்கி
சுட்டேனே னென்பார்கள் வாதிதானே. (39)

வாதிக்கு ஓருபுத்தி சொல்லக்கேளு
　　வகையான பச்சைமண்ணை வீடுகட்டி
நீதியாய் மேற்கூரை கட்டாதாலே
　　நிலவரமாய் மழைபேய்ந்து கரைந்துபோகும்
சாரியாய்ச் சுட்டமண் கரையாதப்பா
　　சரியொக்கும் சத்துகளில் செம்பெடுத்தால்
கோரியே பொன்னாகும் கொடுத்துப்பாரு
　　குற்றமற யாகோபு குணஞ்சொன்னாரே. (40)

சொன்னதொரு செம்பெடுக்க அறியாமற்றான்
　　சுடுவாதி செம்பைத்தான் களங்குசெய்து
நன்னயமாய் மதிசெம்பி லுருக்கிப்பாய்ச்சி
　　நலமாக ஊதிடவே சிதறியோடும்
இன்னிலத்தில் சாஸ்திரங்க ளெல்லாம்பொய்யாம்
　　இதமாகப் பாடினா ரென்றுசொல்லி
கன்னலாய் வாதம்பொய் யென்றுசொன்ன
　　களுவான மடையருக்குக் கண்டுசொல்லே. (41)

நாகசுத்தி.

சொல்லிடவே முன்வைத்த அயத்தின்செம்பை
　　சுகமாகப் பலம்நாலு குகையிலிட்டு
அல்லிடவே உருக்கிநீ வட்டாய்ச்சாய்த்து
　　அடவாக நாகமொன்று வாங்கிநீயும்
கல்லிடவே காண்டியிட்டு உருக்கிநீயும்
　　கனிவாக யிலுப்பை நெய்யி லுருக்கிஊத்த
மெல்லிடவே நாகமது சுத்தியாச்சு
　　மேதினியி லிச்சுத்தி அதிகமாமே. (42)

தங்கசுத்தி.

அதிகமாந் தங்கத்தைத் தகடடித்து
　　அடைவாக கல்காவி பழச்சாற்றாலே
வதிகமா யரைத்துமே குழம்பாய்வைத்து
　　வடிவாகஓட்டிலெழு திரமேகாய்ச்சி
பதிகவே துவைத்திடவே சுத்தியாச்சு
　　பதமாக யெடுத்துமே வைத்துக்கொண்டு
கெதிபெறவே யிப்படிக்குச் செய்துகொள்ளு
　　கெடியான யாகோபு சொன்னவாறே. (43)

## செந்தூரம்.

சொன்னதொரு முன்சொன்ன அயத்தின்செம்பு
சுகமாகப் பலம்நாலு குகையிலிட்டு
நன்னயமா யுருக்கியே குகையிேனுடே
நாடியே தூக்கிவைத்துப் பின்புநீயும்
முன்னமே சொன்ன தங்கம் பலமுமொன்று
முன்னுடி உருக்கிமெள்ளத் தூக்கிப்பாரு
கன்னலாய் மணிபோலே உருகும்பாரு
கட்டுதற்கு நாகமதை ஊட்டக்கேளே. (44)

ஊட்டவே பலம்நாகம் நிறுத்துநீயும்
உடனரையாம் ரசம்சாரம் ரெண்டுமொன்றாய்
நாட்டவே பொடியாக்கி உண்டைபண்ணி
நலமான தங்கம்நின்று உருகும்போது
வாட்டவே கொடுத்திடுநீ தங்கம்வாங்கும்
வடிவாக உருகியது புட்டுப்போலாம்
தேட்டவே யிப்படிக்குச் செய்யாப்போனுல்
திடமாக ஓடிவிடுந் திண்ணந்தானே. (45)

திண்ணமாய் முன்வைத்த அயத்தின்செம்பு
சீர்பெறவே பலம்நாலு உருக்கிநீயும்
பண்ணவே முகம்பார்த்து நாகத்தங்கம்
பதிவாக உருக்கினதைச் செம்பில்தாக்கு
உண்ணவே உண்டுவிடும் உருகிநிற்கும்
ஓடாது காரியம் ஒன்றுதாக்கு
எண்ணமுடன் களங்காகும் ரவிநாலொன்று
யிதமாகக் கொடுத்திடவே பத்துமாத்தே. (46)

பத்தான மாத்தான களங்குதன்னைப்
பதிவாகச் செந்தூரம் பண்ணக்கேளு
சித்தான களங்கத்தைக் கல்வத்திட்டு
சிறப்பாக நொருக்கியே உடைத்துநீயும்
முத்தான யிரதமது பலமுமொன்று
முனையான நாத்தமொன்று யிட்டுநீயும்
கத்தாவின் செவ்வல்லிப் பூச்சாறூட்டி
கணக்காக யிருசாம மரைத்திடாயே. (47)

அரைத்துமே வில்லைபண்ணிக் கதிரில்வைத்து
அடைவாக ஓட்டிலிட்டு ஓடுமூடி
பரைத்துமே பெரியபுடம் போட்டெடுக்கப்
பதையாம லெல்லாமுங் கருத்துப்போகும்
தரைத்துமே கல்வமிட்டுத் தாரந்தன்னைத்
தடையறவே சுத்திசெய்து நாலத்தொன்று
கரைத்துமே போட்டரைமீ பூச்சாற்றாலே
கனிவாகக் குப்பியிட்டு மூடிக்கொள்ளே. (48)

மூடியே புத்துமண் ணேழுசெய்து
முடிவாக மேருவைத்து எரிகால்சாமம்
தேடியே அருணன்போற் சிவந்துபோகுஞ்
செகசால மாடலாந் தெரிந்துகொள்ளு
ஓடியே திரியாமல் ரவிநாறொன்றில்
ஒக்கயிடு ரவிபத்து மாத்துமாகும்
கோடியா மதிபழுக்கும் நவலோகங்கள்
கொடுக்குமுன்னே பழுத்துவிடுங் கொள்கைதானே. (49)

கொள்கையாய்ப் பணவிடைதான் பாலிலுண்ணக்
குணமாகுந் தேகந்தான் கல்தூணாகும்
நல்கையாய் நோயெல்லாந் தவிடுமாகும்
நமனாகும் பசுநரம்பு ஓடியின்றும்
உள்கையா யெலும்பெல்லாம் வச்சிரம்போலாம்
உறுதியாய்ச் செந்தூரம் உயரவிடும்
தள்கையாம் விந்திறுகி மணிபோலாகும்
சாற்றினது செந்தூரந் தன்மையாமே. (50)

தன்மையாய்ச் செந்தூர முண்ணும்போது
தக்கதெகரு பெண்தள்ளு உப்புந்தள்ளு
உண்மையாய்ப் புளிதள்ளி உண்டுதேரு
உறுதியாஞ் செந்தூரம் உண்மையாகும்
கண்மையா யொருவருக்குங் காட்டொணாது
காட்டினால் ரவிகோடி நரகமெய்தும்
வண்மையா யிந்தமுன்னூர் தன்னிற்றானும்
வடிவாகச் சொல்லிவிட்டேன் வரிசையாமே. (51)

வரிசையாய்ப் பஞ்சிட்டுப் பாரமேற்றி
வடிவான ரசவாதம் வண்மையாகும்
உரிசையாய்ப் பொன்னாகுந் தூரஓடும்
உண்மையாய் நபிமார்கள் சொன்னநீதி
பரிசையாய்ப் படபடத்துச் செய்தாயானால்
பகாரிது வந்தவித்தை ஓடிப்போகும்
நசிசையாய்க் குங்குமத்தைச் சுமக்கப்பட்ட
நலமான கழுதையொக்கும் நாட்டிலோர்க்கே. (52)

நாட்டிலே ரசவாதமென்றசொல்லு
நலமாக ஆண்டவரும் நபிமாரோக்கும்
ஏட்டிலே பார்த்தாலே யென்னசெய்ய
யிதமாக மனதுதனில் பாட்டைவைத்து
கூட்டிலே கிளிப்பிள்ளை அடைத்தாப்போலே
கூறிட்டுத் தனித்திருந்து பாகமாக
தாட்டிகமாய்ச் செய்துமே முடித்துக்கொண்டால்
சார்பாகும் இன்னூலின் தண்மையாமே. (53)

தண்மையா யிந்தமுன்னூர் ராசாவாகும்
தாக்கிடவே மந்திரியாங் கைபாகங்கள்
இண்மையாம் படைத்தலைவர் கேள்வியாகும்
உறுதியொக்கும் உலைபாகம் கண்டறிந்து
வண்மையாய்த் துருப்பாகுங் காதிற்கேட்ட
வசனம்போற் செய்திடவும் வகையுமாகும்
கண்மையா மிவையெல்லாம் விட்டுச்சுட்டால்
கடனாளி யாயிருந்து கருதுவானே. (54)

கருதவே யிப்படிக்கு நூலைப்பார்த்துக்
கனிவாக கேள்வியைத்தான் கேட்டுத்தேறி
வருகவே சடுவாதி தனையறிந்து
வாட்டமாய்க் கைபாக வரிசைகண்டு
தருகவே சரக்கினுட வலுவறிந்து
தாட்டிகமா யுலையூதுங் காத்தறிந்து
பருகவே குகையினுட பாகங்கண்டால்
பதிவான ரசவாதம் பதியும்பாரே. (55)

பதியவே யிப்படிக்குப் பாராப்போனல்
பாகமது பரபரப்பாய்ச் செய்துகெட்டு
விதியென்று கரிசுட்டுக் கெட்டேனென்று
வீண்பேச்சுச் சொல்வார்கள் உலுத்தவாதி
கெதிவேறே யில்லையென்று வயித்தியம்பார்ப்பார்
கெட்டியாய் வாதம்போல் வயித்தியம் செய்து
சதியாகத் திரிந்தலைவார் கர்மியப்பா
தாட்டிகமா யாகோபு சொன்னேனானே. (56)

நாளுகச் செம்பொன்று நல்கக்கேளு
நாட்டிலே சொல்லாதே யிரும்பின்மார்க்கம்
தாளுகத் தந்திடுமே செம்புதன்னை
தாட்டிகமா யதையெடுத்து வெள்ளிதன்னில்
மாளுகப் பாய்ச்சிடவே மதிபழுக்கும்
மக்காவின் தேசத்து நபிமாரெல்லாம்
வாளுகச் செய்திடுவார் வழக்கமப்பா
வண்மையுள்ள யாகோபு வகைசொன்னாரே. (57)

## அயச்செம்பு.

சொல்லவே அயச்செம்பு சொல்லக்கேளு
சுருதிதனை ஆராய்ந்தோர்க் கெய்தும்பாரு
நல்லவே துருசியது பலமும்பத்து
நலமான நாத்தமது முக்காலாகும்
வெல்லவே சுடர்க்கொடியோன் அரையுமாகும்
வீரமது பலங்காலாம் நிறுத்துக்கல்வம்
மெல்லவே யிட்டுமே பழச்சாற்றாலே
மெதுவாக நாளாறு அரைத்திடாயே. (58)

அரைத்துமே வில்லைதட்டிக் கதிரில்வைத்து
அடைவாகக் காயவைத்துச் சொல்லக்கேளு
தரைத்துமே சுண்ணம்பு உப்புநேரே
தனையரைத்து மேனியென்ற சாற்றலாட்டி
பரைத்துமே வில்லைக்கு அங்கியிட்டு
பதிவாக முழம்புடத்தி லிட்டுவாங்கி
முரைத்துமே துருசில்நின்ற செம்பெல்லாந்தான்
முடியவே செத்ததென்று பரிட்சைபாரே. (59)

பாரேநீ கரிதோண்டிக் கொஞ்சமிட்டுப்
பதருமா லுருக்கிமெள்ளப் பார்க்கும்போது
ஆரேநீ நீலம்போ லோடிப்போகும்
அடைவான கரிதனிலே ஒன்றுமில்லை
வாரேநீ யிருந்துதென்றால் பாகமாகும்
வடிவாகக் கரிதனிலே செம்பிருந்தால்
தேரேநீ ரவிசாக வில்லையென்று
தேடியே முன்போலக் கொன்றிடாயே. (60)

கொன்றிட்டுப் பின்புதான் சொல்லக்கேளு
குணமான அரபொடிதான் ராவிநீயும்
அன்றிட்டுப் பழச்சாற்றில் மூன்றுநாளும்
அடைவாக ஊரவைத்துப் பின்புகேளு
நன்றியே பாணிவிட்டு அலம்பிநீயும்
நலமாகக் காயவைத்து நாட்டங்கேளு
கன்னியமாய்ப் புடம்போட்ட துருசுக்குத்தான்
கனிவாக யெட்டிலொன்று சேர்த்துக்கொள்ளே. (61)

சேர்த்துமே பழச்சாறு விட்டுஆட்டி
சிறப்பாக வில்லைதட்டி ரவியிற்காய
பார்த்துமே வைத்தெடுத்து ஓட்டிலிட்டுப்
பதிவாக சீலைமண்தான் பாகமாக
வாத்துமே செய்திட்டுப் புடமும்போட்டு
வகையாகப் பின்புதான் வண்மைகேளு
நாத்துமே சந்தானி யெட்டுக்கொன்று
நலமாகச் சேர்த்திட்டு நாட்டங்கேளே. (62)

நாட்டவே புடம்போட்ட அயத்தினோடே
நலமாகச் சேர்த்துஅரை சாமமெட்டு
வாட்டவே பழச்சாறு விட்டுஆட்டி
வடிவாக வில்லைதட்டிக் கதிரில்வைத்துத்
தாட்டிகமாய்ப் புதுஓட்டில் வைத்துமூடித்
தணைச்சுத்தி மண்சீலை வலுவாய்ச்செய்து
காட்டமாய்ப் புடம்போட்டு யெடுத்துக்கொண்டு
கணக்காக முன்குகையில் வைத்திடாயே. (63)

வைத்துமே உருக்கிடவே செம்புமாகும்
வகையான சூரியன்போல் நிறமுமாகும்
தைத்துமே யிச்செம்பில் வேதைகோடி
தாட்டிகமாய் மதியெட்டில் ரெண்டுசேர்த்து
நைத்துமே உருக்கிமெள்ளப் பார்க்கும்போது
நலமாக மாத்தாறு போலேதோன்றும்
கைத்துமே தங்கமதை வைத்துருக்கக்
கனமாக யெட்டாகுங் கருதிப்பாரே. (64)

கருதியே யிதைவிற்றுச் செலவுசெய்து
கனகமென்ற அயச்செம்பு யிடைக்குத்தங்கம்
பருதியே யிட்டுருக்கித் தகடாய்த்தட்டிப்
பதிவான கெந்தகமும் வீரங்காரம்
கருதியே தங்கமிடை நிறுத்துக்கொண்டு
கலமான கல்வமிட்டுப் பழச்சாற்றாலே
உருதியா யரைத்துமே தகட்டிற்பூசி
உற்றுமே நொருங்கமட்டும் புடமும்போடே. (65)

புடம்போட்டு யெடுத்துப்பார் கரியாய்க்காணும்
புகழ்பெற்ற கரிக்கிநீ பாதிகேளு
திடமான கொடியோனைப் பாதிசேர்த்துத்
திட்டமாய்ச் செவ்வல்லிச் சாற்றாலாட்டி
அடமாக யெடுத்துப்பார் புடமுமிட்டு
ஆதிகருஞ் சிவப்பாகுங் கல்வமிட்டு
தடமாகச் சந்தாணி பாதியிட்டுத்
தடையறவே பூச்சாற்றி லரைத்துக்கேளே. (66)

அரைத்துமே வில்லைதட்டிக் கதிரில்வைத்து
அடைவாகப் புறஓட்டில் வைத்துமூடி
தரைத்துமே புடம்போடு சிவந்துபோகும்
தனையெடுத்து நபிமாரைத் தோத்தரித்து
பரைத்துமே வெள்ளியெட்டில் ரெண்டுசேரு
பதிவான தங்கமாம் பாரிலோர்க்கு
புரைத்துமே வித்திட்டுச் சீவனங்கள்
புதிதாகச் செய்துமே பேசக்கேளே (67)

பேசவே செலவுக்கு வைத்துக்கொண்டு
பின்புதான் முன்னெடுத்த அயச்செம்பைத்தான்
வாசவே பலம்நாலு நிறுத்துக்கொண்டு
வடிவாகத் தங்கமொன்று நாகமொன்று
தாசவே முன்போலே உருக்கிச்சேர்த்துத்
தாட்டிகமாய்க் கல்வத்தி லிட்டுநீயும்
பாசவே பொடியாக்கி யிதுநேர்சூதம்
பாச்சிட்டு நாத்தமது யிடைதான்சேரே. (68)

சேர்த்துமே பொடியாக்கிப் பூச்சாற்றாலே
சிறக்கஅரை பனிரெண்டு சாமந்தானும்
பார்த்துமே வில்லைதட்டிப் புதுஓட்டிட்டுப்
பரிவாகச் சீலைமண் பதியச்செய்து
காத்துமே புடம்போடு கருத்துப்போகும்
நலமாக யெடுத்துமே கல்வத்திட்டுக்
காத்துமே யெட்டுக்கு ரெண்டுதானும்
கனிவான தாளகத்தைக் கூடச்சேரே. (69)

கூடவே சேர்த்துமெள்ளப் பூச்சாற்றாலே
குணமாக அரைத்துமே வழித்துநீயும்
ஆடவே கதிரில்வைத்துக் குப்பிக்குள்ளே
அடைவாக அடைத்துமே வாயைமூடி
நாடவே சட்டிதனில் மணலையிட்டு
நலமாக விரற்கிடைதா னுலதாகப்
பாடவே குப்பிக்கு யேழுசீலை
பதிவாகச் செய்துமே பகரக்கேளே. (70)

பகரவே சட்டிதனில் மணலைவைத்துப்
பதிவாகச் சுத்திவர மண்ணையிட்டு
சகரவே விரற்கடைதா னெட்டதாகத்
தாக்கியே மண்ணைத்தான் தன்மையாக
வகரவே அடுப்பேத்திச் சாமங்கேளு
வடிவாகப் பனிரெண்டு சாமந்தீதான்
நகரவே யெரித்திட்டு அடுப்பையாத்து
நலமாகக் குப்பியெடு நாடிப்பாரே. (71)

நாடிப்பார் குப்பியை நீ உடைத்துப்பாரு
நலமாக மாதளம்பூ போல்சிவக்கும்
கூடியே யெடுத்துநீ பாத்தியாவைக்
குணமாக ஓதியே குறியதாக
தேடியே செம்புநூ றொன்றுருக்கித்
திடமாகச் செந்தூர மொன்றுயீய
பாடியே பத்தரைதான் மாத்துமாகும்
பாகமா யாகோபு பயின்றார்தாமே. (72)

தானென்ற செந்தூரம் நபிமாருக்குத்
தாட்டிகமா யாகுமென்று யாகோப்சொன்னார்
வானென்ற உலகத்தோர்க் காகாதாகும்
வடிவாகச் செய்தாக்கால் மரணமாகும்
ஊனென்ற உலகத்தோர் களங்குசெய்து
உறுதியாய்ப் பிழைக்கலாம் உத்துப்பாரு
நானென்ற ஆணுவத்தாற் செய்யவேண்டாம்
நபிமார்க ளாடுகின்ற ஆட்டந்தானே. (73)

ஆட்டான கேள்வியினால் வாதஞ்சுட்டு
அறியாமல் நான்கெட்டே னென்றுசொன்னால்
பாட்டான பாட்டைத்தான் படிப்பார்மூடர்
படிப்பில்லை தினையளவு பொன்னைக்காணார்
நீட்டான நூலறிந்து படித்துச்சுட்டால்
நிலைக்குமே ஒருதொழில்கள் நிசமதாகும்
கேட்டாக்கால் வாதந்தான் சொல்லுவாரோ
கேள்வியினால் சுடவேண்டாம் உலகத்தோரே. (74)

உலகத்தில் வாதமென்றாற் சிரிப்பார்மூடர்
உள்ளுணர்ந்து அறியாத மயக்கந்தாலே
பலகத்தும் பலனில்லை அறிவில்லாதார்
படுபாவி கன்னிகையைத் தொட்டதாலே
நிலமுழுதால் பயிராகும் உழுகாதாலே
நின்றபயிர் முளையாது நிலைமைபாரு
கலங்கத்துப் பேசாதே வாயைமூடு
கருமியவன் செவிதனிலே காட்டாவாறே. (75)

காட்டவே விவேகமுள்ள சீடனுக்குக்
கனமாக யிந்தநூல் தன்னைக்காட்டு
வாட்டவே சத்திருட வளமைதன்னை
வளமாகப் போதித்து செம்பைக்காட்டு
மாட்டவே பாவமில்லை சீடன்தன்னை
மதிபார்த்துச் சோதித்து வசனங்கேளு
தேட்டாண்மை யானதொரு சீடனுக்குத்
திரமாகச் சொல்லியே தோய்ந்துபாரே. (76)

உறுதி யில்லார்.

தோய்ந்துமே சிறிதுபேர் தொண்டனாகத்
தொல்லுலகிற் பேசுவார் அவர்களோடே
மாய்ந்துமே திரியாதே மதிமயங்கி
மனதாகச் சத்துவகை பாதிபோட்டு
ஆய்ந்துமே உனக்கென்ன தெரியுமென்று
அவதியாய்ச் சொன்னக்கால் அடுத்துநன்றாய்
வாய்ந்துமே நல்லமனம் போலேபேசி
வடிவாக முன்போலே மருந்துசெய்யே. (77)

செய்யவே சத்தெடுக்கச் சத்தைக்கேட்டுச்
செயமாகக் கல்வமிட்டு வெங்காரத்தை
பையவே ஒட்டிக்கு ரெட்டிதானும்
பதியயிட்டு நல்லவன்போ லரைக்கச்சொல்லு
நையவே அரைத்திட்டுக் காயவைத்து
நலமாகக் காடையென்ற புடத்திலிட்டு
கையினு லவனைநீ யெடுக்கச்சொல்லிக்
கருத்தாகச் சொல்லிவிட்டு அப்பால்நில்லே. (78)

அப்பாலே நின்றுமே அறிக்கைசொல்லு
ஆதியாம் புதுக்குகையில் வைக்கச்சொல்லு
முப்பாலா யுலையில்வைத்து ஊதச்சொல்லு
முயற்சியாய் வெங்காரங் கசிவுகண்டு
தப்பாமல் குகையதனை உருக்கிக்கொண்டு
தடையறவே நெருப்பதனி லிறங்கிப்போகும்
வப்பாலே குகைதூக்கு மென்றுசொல்ல
வடிந்துமே மணிமணியா யிறங்குந்தானே. (79)

இறங்கியே நெருப்பதனில் சத்துத்தியும்
நிலவரமாய் நானென்ன செய்வேனென்று
துறங்கியே சொல்லிவிட்டு முன்னைப்போலே
துடியான பணம்போட்டுச் சரக்குவாங்கி
அறங்கியே சொல்லிடுநீ யிப்படிக்கு
அடைவாக அவனுக்குச் செய்யவேதான்
நிறங்கியே முடியமட்டு மித்திரம்பண்ண
நிசமாக அவனசந்து போவான்தானே. (80)

தானென்று சொன்னதொரு பேச்சுக்கேட்டு
தவித்திடுவான் உன்னினைவைக் கெட்டிபண்ணு
ஊனென்று அவனலுத்துப் போவானப்பா
உற்றுமே மனதிலெண்ணி அப்பாலேகு
வானென்ற வாதெல்லாங் குறைந்துவெட்கி
வழியோடே வந்தாலுஞ் சொல்லவேண்டாம்
பானென்ற பலனுள்ள சீடன்பாரு
பகுத்தறிவால் சொன்னுக்காற் பலனுமாமே. (81)

பலனுக முன்சொன்ன செந்தூரத்தைப்
பணவிடைதான் தேனிலுண்ண மண்டலத்தில்
பிலனுகும் விந்திருகும் மேனிதானும்
பேசரிய செவ்வலரிப் பூப்போலாகும்
அலனுக நரம்பிருகும் துளிராமேனி
ஆதிமுத லாண்டவர்போல் திரேகமாகும்
கலனுக நெஞ்சமுத்த மாகுங்கண்டீர்
கனிந்துமே யாகோபு கருதினுரே. (82)

கருதியே மண்டலமும் அந்திசந்தி
கருணைபெற உண்டிடுநீ கருத்தைக்கேளு
வருதியே உப்போடு பெண்ணுமாகா
வடிவான புளியாகா மயக்கமாகா
நிருதியே பூசணிக்காய் பாகற்காயும்
நிலையில்லாப் பறங்கிக்காய் தானுமாகா
உருதியாய் நல்லெண்ணெய் யாகாதென்று
ஓதினுர் யாகோபு உறுதிதானே. (83)

உறுதியுற்றுச் செந்தூரஞ் செய்துகொள்ளு
ஓதரிய மகமதுவைத் துதித்துப்போற்று
கருதியே கோரானை நித்தம்மூன்று
காலமுமே தொழுதுநீ கருணைவைத்து
அருதியாய் உலகத்தி லடக்கமாக
ஆண்மையாய் வாழ்ந்துமே அநேககாலம்
சுருதியாய் நினைவுதனைச் சிந்தித்தேறத்
தாட்டிகமா யாகோபு தண்மைதானே. (84)

தண்மையாய் மக்காவின் தேசந்தன்னில்
தடையில்லா நபிமார்கள் மெத்தஉண்டு
உண்மையாய் மகமதுவைத் துதிப்பாரப்பா
உறுதியாய் வாதங்கை கட்டிநிற்கும்
வண்மையாய் வாய்பொத்தும் நினைத்ததெல்லாம்
வாசனையாங் கைகூடும் வழக்கமாகும்
துண்மையெனச் சொல்லிவிட்டேன் முன்னூறுதன்னை
சூதறிந்து பார்த்தாலே தோய்வுமாமே. (85)

தோய்வாகப் பார்த்துமே பாசந்தன்னைத்
தொல்லுலகில் மகாயோகம் வந்துகூடும்
நாயமார் சித்தங்கள் ரெம்பவுண்டு
நானறிந்தே னதுகண்டு உலகத்தோர்க்கு
மாயமாய்ப் போகாற் சொல்லிவிட்டேன்
மதியைநினை மயங்காமல் மார்க்கம்நின்று
தாயமா யிருந்துமே சத்தைப்பார்த்தால்
தாட்டிகமாய்ப் பொருளெல்லாம் வந்துசேரும். (86)

சேரவே கிழக்கிலுள்ள தேசத்தோர்கள்
சித்தாக மகமதுவைத் துதிக்கமாட்டார்
வாரமாய்ப் பள்ளிக்குப் போகவேணும்
வாயாலே சொல்லிடுவார் நெஞ்சிலில்லை
கோரமாய்ச் சொல்லிடுவார் கோரான்தன்னை
கொடுத்தாலும் வாசிக்க அறியாமூடர்
பாரமா யிவர்களுக்கு நாயன்றானும்
பாதிமட்டுந் தரித்திரியப் பண்புமாமே. (87)

பண்பாக ஆண்டவனைத் துதியாமாந்தர்
பலனில்லை அவர்களுக்கு பிராணங்கொஞ்சம்
கண்பார்வை சத்துகளை யறியாமூடர்
கனிவான செல்வமில்லை காணியில்லை
உண்பாரை உடுப்பாரைப் பார்த்துயேங்கி
உறுதியற்றுப் பிச்சைதான் வாங்குவார்கள்
தண்பாக வெறிகொண்ட சண்டாளற்குத்
தடையுண்டு யாகோபு சொன்னார்தானே. (88)

தானென்று யின்னமொரு சத்துச்செம்பு
சாரும் செய்ததுவை யிந்தநூலில்
கானென்று சொல்லவே கண்டுகொள்ளு
கணக்கான சாராக் காசுதன்னை
வானென்று சொல்லுகிறே னூற்றுக்கேளு
வடிவான மாத்தநுவும் உசத்திமெத்த
கானென்று மூன்னூறிற் சொல்வேன்பாரு
நபிமார்கள் சொன்னதுவை நாடிப்பாரே. (89)

துருசுச்சத்து

நாடிப்பார் துருசதுவும் பலமும்பத்து
நலமான நாத்தமது யிடையும்ரெட்டி
கூடிப்பார் எலுமிச்சம் பழச்சார்விட்டுக்
கூசாம லிருசாம மாட்டி நீயும்
தேடிப்பார் வில்லைதட்டிக் கதிரில்வைத்துத்
திடமாக வில்லைக்குக் கவசங்கேளு
பாடியே சுண்ணாம்பு சேருரெண்டு
பதிவான கல்லுப்புச் சேருரெண்டே. (90)

ரெண்டோடு மேனியென்ற சாற்றாலாட்டி
நிலைக்கவே புடமிட்டுக் கல்வத்திட்டு
பண்டோடு மேனியென்ற நீராலாட்டிப்
பதியவே அரைத்துமைபோல் பாகங்கேளு
கண்டோடு புடம்போடத் துருசுவில்லை
கனிவாக மேற்கட்டிக் கணக்கதாக
மூண்டோடு அதின்பேரில் மண்ணுச்சீலை
முக்கியமாய்ச் செய்தவுடன் புடத்தைப்போட்டே (91)

புடம்போட்டு யெடுத்துப்பார் கரியாய்நிற்கும்
புகழாகக் காரமதுயெட்டிலொன்று
தடம்பொரித்துப் போட்டுமே அரைத்துருக்கு
தடையறவே வெங்கலம்போற் சத்துமாகும்
படமாகச் சத்துநிற சத்துக்காலில்
பதியயிடு வீரமதைப் பார்த்துநீயும்
நடமாகக் கல்வத்தி லிட்டுநீயும்
நல்லாகப் பாணியினு லரைத்திடாயே. (92)

அரைத்துமே வைத்துப்பார் மஞ்சள்போலே
அடைவாகப் படர்ந்துவரும் பின்புகேளு
வரைத்துமே கள்ளமது போக்கிநல்ல
வடிவான சேரெடுத்து மார்க்கங்கேளு
தரைத்துமே ஆட்டமூரி படியும்ரெண்டு
தனிலுருக்கி யிருபத்தி ஒன்றுசாய்க்க
பரைத்துமே சுத்தியாம் கசடுநீங்கும்
பாகமதைச் சொல்லுகிறேன் பாரிலோர்க்கே. (93)

பாரிலே கல்வமிட்டு நையத்தட்டிப்
பதிவான சோறுதனில் கடுக்காயிட்டு
ஊறியபின் சோறுமது தெளிந்தநீராம்
உத்துஅரை வில்லைகட்டி சாமம்நாலு
தாறியபின் கதிரில்வைத்துக் காயப்போடு
தாட்டிகமா யகலில்வைத்துப் புடத்தையிட்டால்
காரியம்போ லுருகியது மணிபோல் நிற்கும்
கருணைவைத்து யெடுத்துமே கல்வத்திட்டே. (94)

இட்டுமே முன்சோறு தெளிந்தநீரால்
இன்பமுடன் பனிரெண்டு சாமமாட்டி
கட்டுமே வில்லைபண்ணிக் கதிரில்வைத்துக்
கனிவாக அகலிலிட்டுப் புடத்தைப்போடு
நட்டுமே யிப்படிக்கு அஞ்சுபோடு
நலமாகச் சிவந்துமஞ்சள் போலிருக்கும்
கிட்டுமே வாதமது கொள்ளையாகும்
கிருபைவைத்தார் யாகோபு கொள்கைதானே. (95

கொள்கையாய் முன்வைத்த துருசுச் சத்தில்
குணமாக வீரமது சேர்ந்ததோடே
கள்கையாய்ச் செந்தூர மஞ்சள் தன்னைக்
கணக்காக நாலிலொன்று கண்டுதேறு
வள்கையாய்க் கல்வமிட்டுப் பாணியாலே
வளமாக அரைத்துவில்லை கதிரில்வைத்து
உள்கையா யகலிலிட்டுப் புடமூன்றிட்டு
உறுதிபெற யெடுத்துப்பார் சிவப்புமாமே. (96)

ஆமிந்தச் சிவப்புதனை யெடுத்துப்பார்த்தால்
அல்லாவைப் போலாகும் நபிமார்சொன்னார்
காமிந்த வெள்ளியது நாலுருக்கிக்
கணக்காகச் செந்தூர மூன்றுதாக்கு
வாமிந்த உருகியது வாங்கிக்கொள்ளும்
வடிவாகத் தங்கமது ஒன்றுகூட்டி
நாமிந்தப் படியாக வூதிப்போடு
நபிமார்கள் சொல்போலே தங்கமாமே. (97)

தங்கமாம் யிதைவிற்றுச் செலவுசெய்து
தடையறவே செந்தூரஞ் செய்யக்கேளு
பங்கமாய்த் தங்கத்தில் ஒட்டிரெட்டி
பதிவாக யீய்ந்துருக்கி வூதிப்போடு
அங்கமாய்த் தகடடித்துப் பின்புநீயும்
அடைவான கெந்தகமும் வீரமிட்டு
துங்கமாய் முன்னிடையாய்க் கல்வமிட்டுத்
றுடியாக அரைஅன்னந் தன்னால்தானே. (98)

தன்னாலே ஆட்டிநீ யிருசாமந்தான்
தடையறவே தகடுக்கு மேலேகட்டி
கன்னாகக் கதிரில்வைத்துக் காயப்போட்டுக்
கருணையாய் புடமிடவே கொறுங்கும் நன்றாய்
நன்றாக நொருங்கமட்டும் புடத்தைப்போடு
நலமாக யெடுத்துமே கல்வத்திட்டு
பின்னாலே சுடரைத்தான் பாதிசேர்ந்துப்
பிற்பாடு பூச்சாறு விட்டுஆட்டே. (99)

ஆட்டியே வில்லைக்கட்டிக் கதிரில்வைத்து
அடைவாகப் புகைஓட்டில் வைத்துமூடி
காட்டியே புடமிடவே நன்மையாகும்
கலமான சந்தாணி யிடையேசேர்த்து
கூட்டியே பழச்சாறு விட்டு ஆட்டிக்
குணமாக வில்லைகட்டிப் புடமுவிட்டு
தாட்டிகமா யெடுத்துப்பார் செம்புமாகும்
தடையில்லை தங்கத்தின் செயலுமாமே. (100)

செயலாக வெள்ளிபத்தி லொன்றுபீயச்
செழுமைபெறச் சாறூரக் காசுமாகும்
அயலார்கள் ஒருவருக்குஞ் சொல்விடாதே
ஆனந்த மயமாக நின்றுதேறு
நயமாக வித்துமே செலவுசெய்து
நானிலத்தி லிருந்துமே பொறுமையாக
தயவாக நபிமாரைக் கண்டுபோற்று
தாட்டிகமா யாகோபு சொன்னவாறே. (101)

சொன்னதொரு நல்லோர்க்கு வாதமுண்டு
சொற்பொரிய செம்புண்டு தங்கமுண்டு
நன்னயமாய்ச் செல்வமுண்டு நடக்கையுண்டு
நானிலமும் அவர்களுக்கு நன்மையுண்டு
இன்னபடி நபிமார்போ லியற்கையுண்டு
யிருந்தவிடந் தன்னிலே யியல்புமுண்டு
தன்னகரில் சித்தியுண்டு நன்மையுண்டு
தாக்கான மனமுண்டு தாசகிப்பாரே. (102)

தாக்கிப்பார் கருமிக்கு வாதமில்லை
தாட்டிகமாய்ப் பேசுவார்க் கொன்றுமில்லை
தூக்கியே சொல்லிடுவார் உலுத்தமாண்பர்
துணையில்லை அவர்களுந்தான் துலைந்துபோவார்
நோக்கியே அலைவார்கள் வீணிற்செய்து
நுணுக்கத்தைக் காணமல் அலைந்துகெட்டு
பாக்கியத்தை வாதத்திற் சிலவுசெய்தேன்
பலனில்லை யென்பார்கள் பாரிற்றானே. (103)

பாரிலே வாதங்கள் பொய்யதென்றால்
 பாக்கியமும் பொய்யாகும் பாரிலோர்க்கு
ஊரில்நின்ற ஆண்டவனும் பொய்யதாகும்
 உறுதிபெற்ற நபிமார்கள் பொய்யதாகும்
காரில் நின்றும் பொய்சொல்லார்க் கெய்தும்பாரு
 கருத்துடைய செல்வம்வரும் காட்சியுண்டாம்
சோறில்லா தவர்களுக்குத் தாக்கமுண்டோ
 சுத்தரச வாதிக்கு மெய்துந்தானே. (104)

ஞாயம்

எய்துமே துரிசுக்குள் செம்பைக்கொள்ள
 யெத்தனைநா ளெல்லாந்துமே கெட்டுத்தேறி
பய்யவே நபிமாரை அடுத்தேனப்பா
 பகாரிய நபிமார்கள் வெகுநாட்சென்று
வையகத்திற் கெந்தியுடன் வீரஞ்சேர்த்து
 வகையாகக் கொல்லென்று வழியுஞ்சொன்னார்
கொய்துமே நல்லதென்று அரைத்துப்போட்டேன்
 குணமாகக் குகையில்வைத்து உருக்கினேனே. (105)

உருக்கையிலே நீலம்போ லோடிப்போச்சு
 உத்துமே கரியைநான் பார்த்தேன்பாவா
பெருக்கவே ஒன்றுமில்லாப் போனதாலே
 பேணியே நபிமாரை அடுத்துக்கிட்ட
பருக்கிடவே நின்றுஅடி பணிந்துகேட்டேன்
 பகைத்தார்கள் தயவுநான் சொல்லச்சொல்லத்
துருக்காகச் சொல்லியே பின்புதானும்
 துணையாகச் சத்துதனைச் சேரென்றாரே. (106)

சத்துதனைச் சேர்த்தரைத்து வில்லைதட்டிச்
 சரியாகப் புடம்போட்டு யெடுத்துக்கையில்
வைத்துநபி மார்களைத்தான் வணங்கிச்சென்றேன்
 வகையான சத்தாணி சேரென்றார்கள்
முத்துமே சலாஞ்செய்தேன் பாவாயென்றேன்
 முதன்மைபெற யெனுமிச்சம் பழத்தைச்சொல்லி
சித்துக்கு ஆண்டவன்மே லாணையிட்டுச்
 செய்யென்று மொழிசொன்னார் செய்கைதானே. (107)

தானென்று பின்னுமொரு செய்திகேட்டேன்
　　தாட்டிகமாய்ப் பஞ்சமித்திரம் நூல்கள்பாட
கோனென்ற உத்தரவு பெற்றுக்கொண்டு
　　குணமாகச் சேர்த்தரைத்துப் புடத்தைப்போட
வானென்ற கரியாக யிருந்ததென்று
　　வழியாக யில்லையென்று மயக்கங்கொண்டேன்
கானென்ற நபிமார்கள் பயப்படாதே
　　கருணைபெறக் குகையிட்டு உருக்கென்றாரே. (108)

உருக்கிடவே செம்பாச்சு உறுதியாச்சு
　　உண்மைமதி யெட்டுக்கு ரெண்டுசெம்பு
பெருக்கவே கொடுத்துருக்க மாத்துஆறு
　　பெருமைபெற கண்டுமன மகிழ்ந்தேன்பாவா
குருக்களவர் சொன்னதுதா னிந்தமட்டும்
　　சுகமாக யிடைக்கிடைதான் தங்கம்வைத்து
சுருக்கவே உருக்கென்று நபிமார்சொல்லச்
　　சுகமாக உருக்கிவித்தேன் கொள்கைதானே. (109)

தானேதான் உருக்கியே கடையில்வித்து
　　சகலசித்து மாடியே சீவனத்தை
ஆனேதான் பண்ணியே சிறிதுகாலம்
　　அடைவாக நபிமாரைக் காத்திருந்தேன்
வானேகான் மனதிரங்கிச் செந்தூரத்தை
　　வகையாகக் கேட்டுமே சொன்னார்பாவா
பானேமுன் னயமெடுத்த செம்பிலேடே
　　பதிவாகத் தங்கத்தைச் சேரென்றாரே. (110)

சேரென்று யிடைசேர்த்து உருக்கச்சொன்னார்
　　சிற்பெரிய நபிமார்க ளாடுமாட்டு
வாரென்றார் நாத்தமுடன் வீரஞ்சேர்த்து
　　வகையாக அரைத்துமே தகட்டிற்பூசி
நானென்று நொருங்கமட்டும் புடத்தைப்போட்டு
　　நலமாகக் கொடியோனைச் சேர்க்கச்சொல்லி
கூரென்று புடம்போட்டு யெடுத்துவாங்கிக்
　　குணமாக வெள்ளிதனிற் கொடுத்தார்தானே. (111)

கொடுத்திடவே மதிபழுத்த நேர்மைகண்டேன்
குணம்பெரிய நபிமாரைத் தொழுதிறைஞ்சி
அடுத்திடவே லாயிலா யில்லல்லாகூ
ஆண்மையுள்ள மகமதுவைத் தொழுதயானும்
தடுத்தொன்றும் பேசாம லங்கிருந்து
தயவுபெற்று உத்தரவு தானும்பெற்று
கடுத்திட்ட சொல்விட்டுக் குணமும்நல்ல
காரணத்தின் செயலறிந்து கனிந்தேன்யானே. (112)

கனிந்துமே அங்கிருந்து சிலதுகாலம்
கனகமுள்ள ரசங்கட்டக் கேட்டுக்கொண்டான்
பணிந்துமே துருசுநீர் பண்ணித்தந்து
பதிவான குளிகைகட்டிப் பாகமாக
குனிந்துமே கைகொடுத்து யாகூயாகூ
குணமாக அனுப்பியே கொண்டேன்பாவா
தனிந்துமே வெகுதேசஞ் சுற்றிப்பார்த்தேன்
சாத்திரங்கள் பாடினேன் தண்மைதானே. (113)

தண்மையா யிந்தநூல் சொன்னபாகம்
தப்பினல் கடைகெட்ட யாகோப்பென்று
உண்மையாய் சொல்லுவா ரென்றுசொன்னேன்
உறுதியாய்க் கைபாகந் தப்பிச்சென்றால்
வண்மையாய் மூன்றுதிர மருவிப்பாரு
வடிவான பாகமெல்லாம் வெளியாய்ப்போகும்
பெண்மையாய் வாதம்வரும் செம்புமாகும்
பேதையர்போல் திரியாதே பேணிப்பாரே. (114)

பேணியே மனதுதனை ஒக்கப்பண்ணிப்
பிரட்டைவிட்டு நூல்பார்த்து வினையங்கண்டு
ஊணியே ஒருவேளை யென்னவென்றால்
உத்துமே சத்தெடுத்து உருதிபார்த்து
வீணிலே திரியாமல் செம்பெடுத்து
விதமான மதிதனிலே பாய்ச்சயேமம்
காணிலே யிடைசமனாய்ச் சேர்த்துஊது
கருவாக லாபம்வருங் கண்டுகொள்ளே. (115)

கண்டுகொள்ளு யிதைவிட்டு ரெம்பமாத்து
　　கனிவாக வேணுமென்றால் ஒன்றுமில்லை
பண்டுமே பழங்கதைகள் பேசவேண்டாம்
　　பாருலகி விருக்கமட்டு மட்டஞ்செய்து
தொண்டுபட யிதைவிட்டுப் பக்கிரிவேசம்
　　துரிதமாய்க் கொண்டாக்கால் மாத்துரெம்ப
மூண்டுபடச் செய்தாக்கால் அல்லாவுக்கு
　　முக்கியமாய் பொறுக்குமென்று தான்சொன்னாரே. (116)

சொன்னதொரு அயச்செம்பு யில்லாப்போனால்
　　சுருதிதனில் மட்டமது புடமிறங்கா
நன்னயமாய் அயச்செம்பு யேதென்றாக்கால்
　　நலமான துருசுஅயஞ் சேர்ந்தாலாகும்
கன்னல்போல் செம்பாகும் யில்லாப்போனால்
　　கருத்தங்காச் செம்பில்லை கண்டுகொள்ளு
இன்னிலத்தில் உங்களுக்குச் சொல்லிப்போட்டு
　　யிருந்துரைத்தேன் யாகோபு யிதமதாமே. (117)

இதமாகத் தெரியாத வாதிதானும்
　　யின்பமாய் அயச்செம்பு யெடுப்பேனென்று
அதமாகச் சுத்தஅர பொடியையாவி
　　அடைவான மூவிகையி லுருக்குவார்கள்
பதமாகச் செம்புவர வில்லையென்பார்
　　பாகமில்லை யென்றுசொல்லி அலைவார்மூடர்
விதமாகச் சொல்லியே புலம்புவார்கள்
　　வேதாந்த யாகோபு விளம்பினாரே. (118)

விளம்பினேம் செம்புவர மார்க்கங்கேளு
　　விருப்பமாய் அயத்தினுடன் துருசுசேரு
தளம்பவே துருசினுடன் கெந்திசேரு
　　தாட்டிகமாய்க் கெந்தியுடன் வீரஞ்சேரு
அளம்பவே சுடர்க்கொடியோன் தன்னைச்சேர்க்க
　　அப்பவே செம்புசத்து யிருக்கும்பாரு
உளம்பவே வெங்காரந் தன்னைச்சேர்க்க
　　உருகிடவே செம்பாகும் உலகத்தோரே, (119)

உலகத்தில் செம்பான பிறகுநீயும்
உத்தெடு மதிபழுத்த உறவுமாகும்
பலகத்துத் திரியாதே தங்கஞ்சேரு
பதிவான பொன்னுகும் பாரிலோர்க்கு
நிலைபத்தும் ஞானம்வரும் செல்வமாகும்
நீடூழி காலமெல்லாம் உண்ணலாகும்
அலையாதே பரபரப்பா யாகோப்சொன்னார்
அறிந்திட்டால் யெல்லாமுஞ் சித்தியாமே. (120)

அயச்செம்பு

சித்தியா யின்னமொரு அயத்தின்செம்பு
தீர்க்கமாய்ச் சொல்லுகிறோம் உற்றுக்கேளு
சுத்தியாம் அரப்பொடிதான் ராவிநீயும்
நலமாகப் பலம்பத்துப் பீங்கானிட்டு
மூத்திபெறப் பழச்சாறு மிதக்கவிட்டு
மூனிவாக நாள்மூன்று ஊறவைத்து
சத்தியமா யலம்பியதைக் காயவைத்துச்
சாரித்து யின்னமொரு தகமைகேளே. (121)

தகமையாந் துரிசதுவும் பலமும்பத்து
தாட்டிகமாய்ப் பொடியாக்கிச் சட்டியிட்டு
உகமையா யெரித்திடவே வெள்ளைபோலாம்
உத்தெடு பலமஞ்சு கல்வத்திட்டு
பகமையாய் அரப்பொடியும் பலமும்ஒன்று
பக்குவமாய் நாறும்பூ பலமுமூன்று
வகமையாய் பழச்சாறு விட்டுநீயும்
வடிவாக நாள்மூன்று அரைத்திடாயே. (122)

அரைத்துமே வில்லைகட்டிக் கதிரில்வைத்து
அடைவாக மேற்கவசம் அறியக்கேளு
தரைத்துமே சுண்ணம்பு உப்பும்நேரே
தாட்டிகமாய் மேனியென்ற சாறுவிட்டு
வரைத்துமே புடம்போட்டு யெடுத்துநீயும்
வடிவாக மேனியென்ற சாறுவிட்டு
பரைத்துமே அரைத்துவில்லை மேலேகட்டிப்
பதிவாக மண்சீலை வலுவாய்ச் செய்யே. (123)

வலுவாகச் செய்துமே புடமுமிட்டு
வாடியே போகாம லெடுத்துப்பாரு
பலுகவே கரிபோலே தூளுமாகும்
பார்த்திட்டுக் கொஞ்சம்போற் கரியிலிட்டு
கலுகவே உருக்கிப்பார் சத்துமாகும்
கனமான பாகமிது கண்டுகொள்ளு
சலுவாகச் செம்புபோல் கண்டால்நீயும்
சரியாக முன்போலே பூவைச்சேரே. (124)

சேர்த்துமே அரைத்துநீ புடமுமிட்டுச்
சிறப்பாக உருக்கிப்பார் சத்துமாகும்
பார்த்துமே பக்குவமாய்க் கல்வத்திட்டுப்
பதிவான மாடனைத்தான் பாதிசேர்த்து
காத்துமே செவ்வல்லி தன்னாலாட்டிக்
கனிந்துமே வில்லைக்கட்டிக் காயப்போடு
நாத்துமே புதுவோட்டி விட்டுநீயும்
நலமாகப் புடம்போட்டு யெடுத்துக்கொள்ளே. (125)

எடுத்துமே புரம்பாக வைத்துக்கொண்டு
ஏழைமதி போகாதே யின்னங்கேளு
அடுத்துமே கிராவணமும் பலமும்பத்து
அடைவான ஆட்டமூரி தனிலேகேளு
தடுத்துமே பதினொருக்கா லுருக்கிச்சாய்க்கத்
தவளம்போல் நிறமாகும் யெடுத்துநீயும்
படுத்துமே கல்வமிட்டு நையத்தட்டிப்
பதிவான சந்தாணி பாதிசேரே. (126)

சேர்த்துமே அன்னத்தை முரிக்கக்கேளு
செயமான திரிபலாதி முதல்சரக்கு
பார்த்துமே பொடியாக்கிச் சோத்திலிட்டால்
பதிவாக நீராகும் நீரைத்தானே
காத்துமே அதில்விட்டுக் கரையஆட்டிக்
கணக்காக வில்லைதட்டிக் கதிரில்வைத்து
நாத்துமே பெரும்புடமாய்ப் போட்டெடுத்து
நலமாகக் கல்வமிட்டு நாட்டங்கேளே. (127)

நாட்டமென்ன சந்தாணி பின்புதானும்
நலமாகப் பாதியிடு:அன்னநீரால்
வாட்டுபட அரைச்சாமம் நாலுமாகும்
வளமான வில்லைகட்டிக் கதிரில்வைத்துக்
கூட்டுமென்ன ஓட்டிலிட்டுப் புடமுமிட்டால்
குணமான மஞ்சள்போ லிருக்குங்கண்டீர்
தேட்டுவரு மிப்படிக்குத் திரமும் அஞ்சு
செயமாக யிட்டபின்பு சொல்லக்கேளே. (128)

சொல்லவே குருவாச்சு செயமதாகும்
துடியான குருவெடுத்து வைத்துக்கொண்டு
வெல்லவே புடம்போட்ட அயத்தின்சத்தில்
விதமாக யெட்டிலொன்று சொல்லக்கேளு
நல்லவே கிராவணமும் யெடுத்துப்போடு
நலமாகக் கல்வமிட்டு நாட்டங்கேளு
வல்லமையாய்ப் பழச்சாறு விட்டரைத்து
வடிவாக வில்லைகட்டிக் கதிரில்வையே. (129)

கதிரில்வைத்து அகலிலிட்டு மண்ணுசெய்து
கருதியே புடம்போட்டு யெடுத்துக்கல்வம்
பதிவாக விட்டுமே பழச்சார்விட்டுப்
பக்குவமா யரைத்துவில்லை கதிரில்வைத்து
நிதிபெறவே புடமிட்டுச் சொல்லக்கேளு
நிலவரமாய்ப் புதுக்குகையி லிட்டுநீயும்
விதியாக முன்போலே உருக்கச்செம்பாம்
வெற்றிபெற யாகோபு விளம்பினாரே. (130)

விளம்பவே செம்பாகும் செம்புநேர்த்தி
விதமாக யிச்செம்பில் கவரோகோடி
தளம்பவே மதியேழில் மூன்றுசெம்பு
தாக்கிட்டு உருக்கிப்பார் வெடிப்பாய்க்காணும்
அளம்பவே அந்தயிடை தங்கத்தாயை
அடைவாக உருக்கியே ஊதிப்போடு
துளம்பவே பத்தரைக்குக் குறையாதப்பா
துடியாக யாகோபு சொன்னவாரே. (131)

சொன்னதொரு யிதைவித்துச் செலவுசெய்து
துடியாக யின்னமொரு செய்கைகேளு
நன்னயமாய் மூன்னெடுத்த செம்புநேரே
நலமாக யேமத்தை உருக்கிக்கொண்டு
கன்னல்போ லூதியதைத் தகடாய்த்தட்டிக்
கணக்காக நாறும்பூ சிகப்பிகூட்டிப்
பன்னகமாய்ப் பழச்சாற்றி லரைநால்சாமம்
பக்குவமா யரைத்துமுன் தகட்டிற்பூசே. (132)

பூசியே உலரவைத்துப் புடத்தைப்போடு
போக்கோடே யெடுத்துமே பின்புகேளு
தாசியே பின்பொருக்கால் பூசிப்பூசித்
தாட்டிகமாய்ப் புடம்போடு நொறுங்கும் நன்றாய்
வாசியே நொறுங்கினபின் கல்வத்திட்டு
வடிவாக அரைத்துவில்லை கதிரில்வைத்து
பாசியே ஒட்டிலிட்டுப் புடத்தைப்போடப்
பரிவாகக் கரிபோலே தூளுமாமே. (133)

தூளுமா மாடனைத்தான் பாதிசேர்த்துத்
துடியான பூச்சாறு விட்டுஆட்டிப்
பாளுமே போகாமல் நாலுசாமம்
பக்குவமா யரைத்துவில்லை கதிரில்வைத்து
காளுமே புதுஅகலி லிட்டுமுன்போல்
கடிதான புடமிட்டுச் சொல்லக்கேளு
நாளுமே யெடுகல்வ மிட்டுநீயும்
நலமான சந்தாணி சேரக்கேளே. (134)

சேர்க்கவே யெட்டிலொன்று சேர்த்துநீயும்
செவ்வல்லிப் பூச்சாறுல் சாமமாட்டிப்
பார்க்கவே வில்லைகட்டிக் கதிரில்வைத்துப்
பக்குவமாய்ப் புடம்போடு பாரிலோரே
கார்க்கவே சிவப்பாகும் யெடுத்துநீயும்
கருணைபெற அல்லாவைத் துதித்துப்போற்றி
ஏர்க்கவே வெள்ளிபத்தில் ரெண்டுசேரு
யிதமாகத் தங்கமாம் யின்பமாமே. (135)

இன்பமாந் தங்கத்தைக் கண்டபோதே
யிதமாக கெருவமில்லா தேதானில்லு
அன்பாகக் கெருவம்வந்தாற் சொல்லக்கேளு
அடைவான அரசர்கள்தான் உன்னைத்தானும்
வன்பாகக் கூட்டிப்போய்ச் சொல்லச்சொல்வார்
வடிவாகச் சொல்லாட்டால் அரசர்தானும்
முன்பாக உன்னைத்தான் வெட்டுவார்கள்
முடிவாக மனதடங்கி நின்றிடாயே. (136)

நின்றிட்டாற் பலனாகுஞ் சித்தியுண்டு
நிலைதப்பி றுன்னையவர் சின்னஞ்செய்வார்
கன்றிட்டுப் பால்கறந்தாப் போலேவாதம்
கணக்கறிந்து செம்புதனைக் கருதிப்பாரு
நன்றிட்டு லாபம்வரும் அநேகங்கூடும்
நாதாந்த நபிமார்கள் சொன்னநேர்மை
அன்றிட்டு அலுக்காமற் செய்துகொள்ள
அடைவான சித்தியெல்லா மாகுந்தானே (137)

செம்புச்சத்து.

ஆகுமே யின்னமொரு செம்புசொல்வேன்
அன்பாக நபிமார்கள் சொன்னநேர்மை
பாகுபெற நேர்வாளச் செம்புவாங்கிப்
பதியவே பலம்பத்துக் குகையிலிட்டு
தாகுபெற நன்றாக உருக்கிக்கொண்டு
தகுகெந்த கத்தையிடைக் கிடையுமீய்ந்து
நாகுபெறச் சத்தாக மட்டுந்தாக்கு
நலமான சத்தாகு லெடுத்துக்கொள்ளே. (138)

எடுத்துமே வெங்கலம்போற் சத்துதன்னை
யிதமாகக் கல்வமிட்டுப் பின்புகேளு
அடுத்துமே சத்துக்கு வீரங்காலாம்
அதையிட்டு அரைக்கையிலே மஞ்சளாகும்
தொடுத்துமே கொடியோனைப் பாதியிட்டுத்
துணையாகச் செவ்வல்லிப் பூச்சாறிட்டு
படுத்துஅரை வில்லைகட்டிக் கதிரில்வைத்துப்
பதமாகக் குக்குடத்தின் புடத்தைப்போடே. (139)

புடம்போட்டு யெடுத்துமே புரம்பாய்வைத்துப்
போக்கான சத்துவது பலமுமஞ்சு
அடம்படவே பீங்கானி லிட்டுக்கேளு
அடைவான யெலுமிச்சம் பழச்சார்விட்டு
நடம்போடு மூன்றுநா ளூறவைத்து
நலமாகக் கழுவியே உலரப்போட்டு
வடம்போடு முன்போட்ட வில்லைக்குத்தான்
வடிவாக நாலிலொன்று சேர்த்துக்கொள்ளே. (140)

சேர்த்துமே பழச்சாறு விட்டுஆட்டிச்
செம்மையாய் வட்டதுபோல் வில்லைபண்ணி
கார்த்துமே நபிமாரைத் தொழுதுபோற்றிக்
கணக்கறிந்து புடமிட்டு யெடுத்துநீயும்
பார்த்துமே சந்தாணி பாதிசேர்த்துப்
பதிவாகப் பழச்சாறு விட்டரைத்து
வார்த்துமே வில்லைகட்டிப் புடமுமிட்டு
வகையாகக் குகையிலிட்டு உருக்கிடாயே. (141)

உருக்கிடவே ரவியாகும் யிர்தச்செம்பை
உண்மையாய் வெள்ளியதை ஊதிப்போட்டு
நருக்கிடவே யெட்டுக்கு ரெண்டுசேரு
நலமாக மாத்தாறு காணும்நன்றாய்
பருக்கிடவே தங்கமதை யிடையேசேர்த்துப்
பார்த்திடவே மாத்தெட்டு மாகும்நன்றாய்
வருக்கிடவே யிதைவித்துச் செலவுசெய்து
வடிவாகச் செந்தூர வண்மைகேளே. (142)

வண்மையாய்ச் சொன்னமுறை போலேசெம்பு
வடிவாக யெடுத்துமே வைத்துநீயும்
உண்மையாய்த் தங்கமதை யிடையேசேர்த்து
உறுதிபெறத் தகடாக்கிப் பூசக்கேளு
தண்மையுள்ள கெந்தியுடன் சிகரம்கூட்டித்
தாக்கியரை பூச்சாறு தண்மையாக
வண்மையா யிருசாமம் ஆட்டி நீயும்
வடிவாகத் தகட்டின்மேல் கவசம்போடே. (143)

போட்டுமே நொறுங்கமட்டும் புடமுமிட்டுப்
பொறியாறி யெடுத்துமே கல்வமிட்டு
நாட்டுமே சுடரைத்தான் சேர்த்தரைத்து
நலமாகப் புடம்போட்டு வெங்காரத்தை
ஏட்டிலுள்ள படிசேரு அரைத்துவில்லை
யினமாகக் கதிரில்வைத்து ஓட்டிவிட்டு
யாட்டுமே யெடுத்துப்பார் சிவந்துநிற்கும்
பார்த்திட்டு யெடுத்துமே பகாக்கேளே. (144)

பகரவே வெள்ளிபத்தில் ரெண்டுமீயப்
பதிவான தங்கமாம் பாரிலோர்க்கு
நகரவே ஒருவருடன் சொல்விடாதே
நபிமார்கள் சாபமிடு வார்களப்பா
தகரவே கண்டவுடன் கெற்சிக்காதே
தகுமான படியிருந்தால் நன்மையாகும்
உகரவே திரியாதே உழண்டுபாரு
உத்துணர்ந்து யாகோபு உரைசெய்தேனே. (145)

உரைசெய்தேன் வடமொழியைப் பார்த்துகாணும்
உண்மையாய் நபிமாரைக் கேட்டுக்கேட்டு
வரைசெய்தேன் வீணருடன் பேசவேண்டாம்
வடிவான சரக்கதனை அலேந்து பாரு
குறையாக யெண்ணாதே சரக்கைக்கண்டு
குத்தமற உன்னினைவில் குருரம்வைத்து
பரையாக உலகத்தில் பத்தியாக
பண்பாக யிருந்திடவே முத்தியாமே. (146)

முத்தியா யாகவென்றால் கெந்திதன்னை
முழுதும்உழை பாகம்வரும் முதலுமாகும்
சித்தியா யாகவென்றால் அயத்தைப்பாரு
சீர்தூக்கப் பலனாகும் சிறப்புமாகும்
புத்தியா யாகவென்றால் நூலைப்பாரு
புதுமைபெறச் சரக்கெல்லாங் கண்டுதேரு
சத்தியமாய் நபிமாரை அடுத்துக்கேளு
சாத்தியாய் பாகமதைச் சல்தியாரே. (147)

சல்தியாய் நபிமாரைக் காணவென்ருல்
சாஸ்திரத்திற் சொன்னபடி சரக்கைவைத்து
வல்தியாய்ச் செம்பெடுத்து வெள்ளிதன்னில்
வடிவாகக் கொடுத்தபின்பு தங்கஞ்சேர்த்து
உல்தியாய்ச் செட்டிகையில் வித்துலாபம்
உண்மையதைச் செலவுக்கு வைத்துநீயும்
நல்தியாய்ச் சூதத்தைக் கட்டித்திரு
காதாக்த யாகோபு நலஞ்சொன்ருரே. (148)

நலமாக யிருக்கவென்ருல் பொன்னைக்கண்டு
நாட்டிலே சொல்லாதே மவுனமாக
பிலனுக யிருந்துமே யாவருக்கும்
பேசாமல் வியாபாரம் பண்ணிக்கொள்ளு
அலனுக அலையாதே அல்லாதன்னை
அடைவாக முப்பொழுதும் வணங்கிப்பின்பு
கலனுக வேதத்தைத் படித்துத்தேறு
கருணைபெற யாகோபு கண்டார்தானே. (149)

கண்டதொரு உலகத்து வாதியெல்லாம்
கனிவாக ஆண்டவரைத் தொழுதாரென்று
பண்டுபோ லுனைவணங்கு வார்களையா
பதிவாக அவர்களுடன் பேசிடாதே
தொண்டுபடு வார்கள் நீ மவுனமாகத்
துடியாகப் பேசாம லிருந்துநீயும்
கொண்டதுபோ லவர்களையு மெச்சிக்கொள்ளு
குணமாக யாகோபு குறித்தார்தானே. (150)

குறித்தார்கள் உலகத்தி லிருக்கும்பேர்கள்
கொடிதாக ஒருவனுக்குப் பணமிருந்தால்
பறித்துமே அவர்களையே யெளியோருக்கிப்
பதிக்கவே நெஞ்செரிப்பு மிகவுங்கொள்வார்
நறித்துமே உலகத்தில் யெல்லோருக்கும்
நலமாக ஆண்டவர்மே லிச்சையாகும்
கறித்துமே ஆண்டவனைத் தொழுகும்போது
கண்டறிவா ருலகத்தில் கருமிதானே (151)

கர்மிக்கு மனதுபோல் நடந்துகொள்ளு
கருணைபெற அவரவர்க்குத் தருமானத்தை
வர்மிக்கும் படிநடப்ப திருக்கவேண்டாம்
வடிவாகச் சடுவாதி தன்னைக்கண்டு
பர்மிக்கப் பேசாதே அவன் பேச்சாகப்
பாரிலே வாதத்தில் வெகுநாள்பட்டேன்
தர்மமா யுன்னிடத்தி லெனக்குஒன்று
தடையறவே கேட்டாக்கால் தான்போவனே (152)

போகுவான் வெகுநாளாய்ச் சுட்டுக்கெட்ட
புலையனுக்கு ஒருபோதுஞ் சொல்லவேண்டாம்
யோகுவான் ஆண்டவன்தன் பொக்கிஷத்தை
ஒருவரா லெடுக்கவே கூடுமோதான்
தாகுபெறக் குடுத்துவைத்தால் தோணுந்தோணும்
தடையறவே நூல்பார்த்தால் துலங்கும்பாரு
வாகுமே யெல்லாமுஞ் சித்தியாகும்
வகையாக லோகத்தின் வழிசொன்னாரே. (153)

அயஉருக்கினம்,

உலோகத்தி னரபொடியும் பலமும்பத்து
உருதிபெறப் பழச்சாற்றில் திரிநாளூற
ஆகமாய்ப் பாணிவிட்டு அலம்பித்திரு
அடைவான ரவிதனிலே காயவைத்து
பாகமாய்ப் பலம்பத்துக் கல்வத்திட்டுப்
பதிவான சந்தாணி பாதிசேர்த்துத்
தாகமாய்ப் பழச்சாறு விட்டுஆட்டித்
தாட்டிகமாய் வில்லைகட்டிக் கதிரில்வையே. (154)

கதிரில்வைத்து ஓட்டுவிட்டுப் புடமுங்காடை
கணக்காகப் புடமிட்டு யெடுத்துக்கல்வம்
பதியாக விட்டுமே பின்புகேளு
பக்குவமாய்ச் சந்தாணி முன்போற்சேர்த்து
சதியாகப் பழச்சாறு விட்டரைத்துச்
சாமமது சென்றபின்பு வில்லைகட்டி
விதியாக அகலிலிட்டு முன்போற்கேளு
விதிபெறவே புடமிட்டு யெடுத்திடாயே, (155)

எடுத்திடவே யிப்படிக்குப் புடமுமஞ்சு
யிதமாகப் புடமெல்லாஞ் சந்தாணிசேர்த்து
அடுத்திடவே புடம்போட்டு யெடுத்தபின்பு
அடைவாக வில்லைதனிற் கொஞ்சமிட்டு
விடுத்திடவே கரியில்வைத்து உருக்கிப்பாரு
விருப்பமாய் லோகமதும் கரைந்துநன்றாய்
படுத்திடவே உருக்கினல் பாகமாகும்
பதிவாக உருகாது போனற்கேளே. (156)

போனலே பழையபடி சந்தாணிசேர்த்துப்
போகவே அரைத்துநீ புடத்தைப்போட
வானலே உருக்கிப்பார் கரியில்வைத்து
வளமாகக் கருப்பாகக் கரியில்நின்று
ஆனலே ஆடினல் பாகம்நேர்த்தி
அப்படிக்குப் பாகமதை அறிந்துசெய்து
தானலே குருவாக வைத்துக்கொண்டு
தாட்டிகமாய்ச் செம்பெல்லா மெடுத்துக்கொள்ளே. (157)

எடுத்துமே யிக்குருதான் யெதுக்கொப்பென்று
யிதமாகச் சொல்லுகிறே னற்றுக்கேளு
அடுத்துமே ஆண்டவற்கு ஒப்பாம்பாரு
ஆண்டவரு மனிதர்களைப் படைப்பாரப்பா
படுத்துமே யிதுபோலச் செத்தசெம்பைப்
பதிவாக உயிர்கொடுக்கும் பகரப்போகா
நடுத்துமே யிக்குருவா லெல்லாந்தங்கம்
நாதாந்த யாகோபு நலஞ்சொன்னரே. (158)

துருசுச்செம்பு.

நலமாகச் சொல்லுகிறேன் துருசிலுள்ள
நாதாந்தச் செம்புதா னிறக்குநேர்மை
பிலனகத் துருசுதான் பலமும்பத்து
பின்புதான் நாறும்பூ பலமும்யேழு
தலனகச் சூடனது பலமுமஞ்சு
தாட்டிகமாய் வீரமது பலமுரெண்டு
கலனக யிதுவெல்லாங் கல்வத்திட்டுக்
கணக்காக எலுமிச்சம் பழச்சாறுட்டே. (159)

ஆட்டியே நாலுநாட் சென்றபின்பு
அதைக்கதிரில் வைத்துநல்லாய்க் காயவைத்து
மூட்டியே சுண்ணாம்பு உப்பும்நேரே
முடிவான மேனியென்ற சாற்றாலாட்டி
வாட்டியே புடமிட்டுப் பின்புகேளு
வடிவாக மேனிச்சார் தன்னாலாட்டி
காட்டியே வில்லைக்குக் கவசங்கட்டிக்
கனமாக அதின்மேலே சீலைசெய்யே. (160)

சீலைசெய்து உடனேதான் புடமூன்றிர்த்துச்
சிறப்பாக யெடுத்துமேற் கவசந்தன்னை
மாலையாய்ப் பிரித்துப்பார் நீலனொக்கும்
மயமாகக் கொஞ்சமெடு கரியில்வைத்து
நாலையா யுருக்கிப்பார் நீலம்போல
நன்றாக ஓடினால் நிலைத்தவேலை
காலையா யோடாமற் செம்பதானால்
கனமாகப் பின்புமே சரக்கைச்சேரே. (161)

சரக்குமே சேர்த்திட்டு அரைத்துக்கொண்டு
சல்லியெடுத் தூக்கல்வந் தன்னிலிட்டு
பாக்கவே முன் செய்த குருவும்பாதி
பார்த்திட்டு யெலுமிச்சம் பழச்சார்விட்டு
வரக்கமாய் ஏகஅரை சாமம்நாலு
வடிவில்லை கட்டிபெரும் புடமாய்ப்போடு
தாக்கவே யெல்லாமுங் குருவுமாகும்
தாட்டிகமா யாகோபு சொன்னவாரே. (162)

சொன்னதொரு புடம்போட்ட வில்லைதன்னைச்
சுருதிபெற நல்லகுகை தன்னிலிட்டு
நன்னயமா யுருக்கிடவே செம்புமாகும்
நாதாக்க ளாடுகிற செம்புமாச்சு
பின்னமில்லாச் செம்புநிறஞ் சொல்லக்கேளு
பேசரிய கதிரவன்போற் காணுங்காணும்
தன்னகரில் விலைபெற்ற செம்புதன்னைத்
தக்கமிட்டு யெடுத்துமே வைத்துக்கொள்ளே. (163)

கொள்ளவே மித்திரத்திற் சாய்க்கக்கேளு
குடிலமா யிலுப்பைப்பூ வருந்தேனுமாகும்
நள்ளவே வாழையுட கிழங்குச்சாறு
நலமான நல்லெண்ணெய் நெய்புமாகும்
வெள்ளம்போல் சொல்லிவந்தே னின்னமுந்தான்
வெகுவாகச் சொல்லுகிறேன் மெத்தமெத்த
கள்ளமாய்க் கட்டுப்பால் சதுரக்கள்ளி
கனிவான பாலாகுந் தேங்காய்ப்பாலே. (164)

தேங்காயின் பாலுடனே கூடச்சேர்த்துச்
சிறப்பாக வகைவகைக்குப் படிஅரைக்கால்
பாங்காக யிதுவெல்லாங் குழப்பிக்கொண்டு
பதியவே உருக்கிச்சா யெட்டுமாகும்
நீங்கியே கர்மிசங்கள் கழன்றுபோகும்
நிலைக்குமே வெள்ளியது தங்கமாகும்
வாங்கியே பார்த்திடவே தங்கச்செம்பு
வடிவான செம்பெல்லாஞ் செய்திடாயே. (165)

செய்திடவே வெள்ளிதனில் வங்கக்கூட்டித்
திடமாக ஊதியபின் னெடுத்து நன்றாய்
வைதிடவே வெள்ளியது யேழுமாகும்
வடிவான செம்பதுவு மூன்றுசேர்த்துக்
கைதிடவே தங்கமது யிடையேசேரு
கனிவான தங்கமாம் வித்துக்கொள்ளு
எய்திடவே சீவனத்தைப் பண்ணிக்கொண்டு
யிதமான செந்தூரஞ் செய்துகொள்ளே. (166)

கொள்ளவே செந்தூரஞ் செய்யக்கேளு
குறிப்பான செம்பதுவும் பலமுமொன்று
தள்ளவே தங்கமது ஒன்றுகூட்டித்
தனித்துமே உருக்கியே தகடாய்த்தட்டி
நள்ளவே கெந்தகமும் வீரயிட்டு
நலமாகப் பூச்சாறு விட்டரைத்துத்
துள்ளவே வில்லைகட்டிக் கதிரில்வைத்துத்
துடியாகப் புடமிட்டு யெடுத்துக்கொள்ளே. (167)

எடுத்துமே கொடியோனைப் பாதிசேர்த்து
யிதமாக முன்பூவின் சாறுவார்த்து
அடுத்துமே வில்லைகட்டிக் காயப்போடு
அதிகமா யோட்டிலிட்டுப் புடத்தைப்போடு
கடுத்துமே சிவந்துவிடும் முருக்கம்பூப்போல
கனமாக யிருந்திடுமே கண்டுகொள்ளு
தொடுத்துமே வெள்ளிக்கு யிருபத்தொன்று
தோய்ந்திடவே தங்கமாந் துய்ந்துபாரே. (168)

துய்ந்துபார் வெகுநூலை ஆராய்ந்தல்லோ
சோதித்தாற் பலனுகுந் தோய்ந்துபாரு
பைந்துபா ரின்னூலைப் பார்த்துத்தேறப்
பதிவான வாதம்வரும் சத்துமாகும்
ஙைந்துபார் செம்பெடுத்து மதியிற்தாக்க
நலமான தங்கமாம் நாட்டுளோர்க்கு
வைந்துவே சோதித்தா'லெல்லாமாகும்
வழிகண்டு யாகோபு வரிசையாமே. (169)

வரிசையாய் சத்தெடுத்துக் காரங்கூட்டி
வழியோடே உருக்காட்டால் சொல்லக்கேளு
உரிசையாய் அயச்சகசடு விலகமாட்டா
உத்துமே சத்ததுவும் நிறமுமில்லை
பரிசையாய் வாட்டதுவு மிகுத்துபோனல்
பதப்படா வாறதுபோ லுதிர்ந்துபோகும்
நரிசையாய்ப் புடமதுவு மீறிற்றானல்
நலமான செம்பெல்லாந் தீஞ்சுபோமே. (170)

தீஞ்சிட்டுச் செம்பதுவும் வருகப்பாரு
சித்தியில்லை உருக்கிறதோர் ஊத்துதப்பில்
பாஞ்சிட்டுச் சத்ததுவுந் தீஞ்சுபோகும்
பதிவான பலனில்லை உருச்சியில்லை
தாஞ்சியே சத்ததுவுந் கிட்டமாகும்
தடையறவே கிட்டத்தை ஊதிப்போடு
வாஞ்சதே நூல்பொய்யாய்ப் போச்சுதென்பார்
வகையறியா வாதிக்குப் புத்திசொல்லே. (171)

ஆத்திநீ சொல்லிவிடு யின்னங்கேளு
யிரட்டல்ல திட்டமாய்ச் செய்துகொள்ளு
மத்திசமாய் மட்டம்போல் நிறமுங்கண்டால்
மதிபெருகப் பொன்னிடைதான் சேர்த்துஊது
நித்தியமாய்த் தகட்டித்துப் புடம்போடாதே
நிலவரமாய் மட்டயிடை தங்கத்தாயை
சத்தியமாய்ச் சேர்த்துநீ உருக்கி நீயும்
சரியாகத் தகடுதட்டிச் சொல்லக்கேளே. (172)

சொல்லவே யீயமிட்டு ஊதவேண்டாம்
சுகமான யீயச்செந் தூரம்போதும்
அல்லவெனீ ளூத்துவர ஊதிப்பின்பு
நலமான தக்குதட்டிப் பின்புநீயும்
வெல்லவே வறுத்தஉப்பு நாலுபங்கு
விதமான புடமாவு மூன்றுமாகும்
கள்ளவே ரேகரைத்துப் புளிச்சார்விட்டுக்
கனமான உண்டைபண்ணிக் கணக்குக்கேளே. (173)

கணக்காகத் தகட்டைத்தா னுள்ளேவைத்துக்
கதிபெருகச் சேவலென்ற புடமுமிட்டு
துணக்காகப் பையயெடு தகட்டைமெள்ளத்
தட்டியே ஒருபீங்கான் தன்னிற்றானும்
வணக்கமாய்த் தகட்டைத்தா னெடுத்துநீயும்
வளமாகக் கரியிட்டுக் காரங்கூட்டி
பணக்காக வைத்துமே உருக்கித்தட்டிப்
பண்பாக முன்போல உப்புவையே. (174)

வைத்துமே புடம்பதமாய்ப் போட்டெடுத்து
வகையான அதரெல்லாந் தட்டித்தீரு
ஸைந்துமே பின்பொருக்கால் வைத்துப்போடு
நலமாகத் தங்கமது யிறங்கும் நல்லா
பைத்துமே யிதையெடுத்து நிருத்துப்பாரு
பதிவாக லாபம்வரும் பயப்படாதே
சித்துமே ஆடலாம் நபிமார்போலே
சிறப்பாக யிருந்துமே வாழ்ந்திடாயே. (175)

வாழ்ந்திடவே நபிமார்க ளாடுமாட்டை
வழிகண்டு யின்னூலில் வழியைச்சொன்னேன்
தாழ்ந்துமே போகாமல் பாகமாகத்
தடையறவே செய்திட்டு வித்துக்கொள்ளு
ஆழ்ந்துமே செலவுசெய்து பள்ளிவாசல்
அடுத்துமே தொழுகிட்டுத் தீன்தீனென்று
வாழ்ந்துமே சொல்லியே செபங்கள்பண்ணு
வடிவான யாகோபு வகைசொன்னாரே. (176)

வகையென்ன சொல்லுகிறேன் உற்றுக்கேளு
வையகத்தி லொருவரு வண்மைபாரு
நகையான யிந்தநூல் மூன்னூர் தன்னில்
நாடியே அங்கங்கே பாகமாக
துகையாகச் சொல்லிவிட்டேன் யெல்லாஞ்சேர்த்து
சுருதிபெற ஓத்தாக்கால் தோய்வுமாகும்
தகையாக யெல்லாமும் படித்தாற்றோனும்
சாத்திரமு நிசமாகுந் தன்மைபாரே. (177)

தன்மையாய் அயச்செம்பு யெடுத்துநீயும்
தடையறவே பலமொன்று நிறுத்துக்கொண்டு
உண்மையாய்த் திங்கமது பலமுமொன்று
உத்துமெள்ளக் குகைதனிலே உருக்கிக்கொண்டு
வண்மையாய்த் தகடாகத் தட்டிநீயும்
வகையாகச் சொல்லுகிற வழியைக்கேளு
கண்மையாய்க் கல்லுப்பு பலமும்நாலு
கடியசெங்கல் பலம்ரெண்டு கணக்குமாமே. (178)

கணக்காக மேனிச்சார் தன்னாலாட்டிக்
கருதியே கையினால் பிடித்துநீயும்
வணக்கமாய்த் தகட்டைத்தா னுள்ளேவைத்து
வடிவாகக் குழக்கட்டை போல்பிடித்து
துணக்கமாய்ப் பெரியபுடம் போட்டுத்தீரு
துடியாக மெள்ளயெடு உண்டைதன்னை
பணக்கமாய் மெள்ளஉடை உப்புரெண்டாம்
பகையான அதிருக்கும் யெடுத்துக்கொள்ளோ. (179)

எடுத்துமே பீங்கானில் தட்டிநீயும்
யேழைமதி போகாதே தகட்டைநீயும்
அடுத்துமே உருக்கிநீ தகடடித்து
அடைவாகப் பழையபடி உப்புக்குள்ளே
தடுத்துமே வைத்துநீ புடமுமிட்டு
தட்டியே அதரெடுத்துப் பின்புநீயும்
படுத்துமே யிப்படிக்குச் செம்பெல்லாந்தான்
பதிவாக அதராக யெடுத்திடாயே. (180)

எடுத்திட்டுத் தங்கமதை உருக்கிக்கொள்ளு
யிதமான அதரோடே கெந்திமுக்கால்
நடுத்துமே வீரமது காலுமிட்டு
நாடியே பழச்சாறு விட்டுஆட்டி
கடுத்துமே புடமிட்டு யெடுத்துப்பாரு
கனிவாகக் கரிபோலே தூளுமாகும்
படுத்துமே கொடியோனைப் பாதிசேர்த்துப்
பழச்சாறு விட்டரைத்து வில்லைகட்டே. (181)

கட்டியே புடமுமிட்டு யெடுத்துப்பாரு
கனமான குருவாகும் கண்டுகொள்ளு
தட்டியே மதியெட்டில் ரெண்டுயீயத்
தன்மைபெறத் தங்கமாம் நல்லமார்க்கம்
வட்டிக்குக் கொடுத்தபொருள் போலேயாகும்
வடிவான யிவ்வேதை வளமையாகும்
பட்டியே பொன்சேர்க்க வேண்டாம்பாவா
பதிலாக யாகோபு பாலித்தாரே. (182)

பாலித்தார் தங்கமில்லாக் களங்கமெல்லாம்
பாதையிலே யெரிந்துவிடு பலனுமில்லை
கோலித்த யிரும்பில்லாச் சத்துவெல்லாம்
கொல்லையிலே தானெரிய மிகவுநன்று
தாலித்த வங்கச்செந் தூரமில்லா
தடையறவே செம்பாகத் தாணியில்லை
கூலிக்கு அறுத்தவள்போற் சொன்னாலென்ன
கொடுமையுள்ள வாதிக்குள் கண்டுபாரே. (183)

கண்டுமே சொன்னதொரு பாகம்விட்டு
கனிவாகச் செய்திடிலோ வர்ணமில்லை
பண்டுமே பழங்கதையி லென்னலாபம்
பதிவான கைபாக வரிசையாலே
தூண்டுமே சத்தினுட மார்க்கமுண்டு
துடியான செம்புண்டு சூட்சமெத்த
வண்டுபோ லலையாதே நூலைப்பாரு
வடிவான பாகம்வரும் வணங்குவாயே. (184)

புடத்து அதர்செம்பு

வணங்குவா யேழையாம் வாதிக்குத்தான்
வடிவான செம்பொன்று வழுத்தக்கேளு
தணங்கியே காசுவிற்குஞ் செட்டியோடே
தாக்கியே அவனிடத்திற் சென்றுபுக்கிக்
கணங்காமல் பொன்னைத்தான் புடமுமிட்டுக்
கனிவாக அதரைத்தான் தள்ளுவார்கள்
பணமில்லா அதரெடுத்து வாங்கிவந்து
பலமொன்று நிறுத்துமே கல்வத்திட்டே. (185)

இட்டுமே ரத்தமது முக்காலிட்டு
யிதமான வெங்காரம் பலங்காலாகத்
தட்டுமே பழச்சாறு விட்டரைத்துத்
தகைமைபெற மூன்றுநா ளரைத்து மைபோல்
கட்டுமே வில்லைகட்டிக் கதிரில்வைத்துக்
கணக்காகப் புடமிட்டு யெடுத்துக்கொள்ளு
பட்டுமே குருவாகும் குருவைவைத்துப்
பதிவாக தொழுதிரைஞ்சி யெடுத்துக்கொள்ளே. (186)

எடுத்துமே பார்த்தவுடன் கருப்புமாகும்
யிதமாகப் புதுக்குகையில் வைத்துருக்கு
அடுத்துமே சத்தாகும் சத்தில்பாதி
அடைவான சடர்க்கொடியோன் சேர்த்துப்பூச்சார்
தடுத்துமே அரைத்துவில்லை காயவைத்து
தடையறவே புடமிட்டு யெடுத்துக்கொண்டு
படுத்துமே வெள்ளியிட்டு உருக்கிக்கொண்டு
பதிவாக ரெண்டுநீ பார்ச்சிடாயே. (187)

பாச்சிட்டு யெடுத்துப்பார் மாத்துஅஞ்சு
பதிவாக விற்றுமே உண்டுதேறு
காச்சிட்டு ஒருவருடன் சொல்லவேண்டாம்
கைகண்ட வித்தையிது கருதிப்பாரு
மாச்சிட்டுக் குருத்தேடி யலையவேண்டாம்
வடிவாக உண்டுடுத்தித் திரிந்துநீயும்
வர்ச்சிட்டுப் பெருமையாய் நின்றுவாழு
வடிவாக யாகோபு வகை சொன்னாரே. (188)

சொன்னதொரு யிப்பாகம் யெளியவாதி
சுகமாகப் பிழைக்கவே சொன்னேன்பாரு
என்னயமா யொருவருக்குங் காட்டவேண்டாம்
நலமாகக் காட்டினால் பொச்சுப்போகும்
கன்னல்போல் கடைசிதனில் சொல்லிப்போட்டேன்
கருத்துவைத்துச் சோதித்தால் கண்டமாத்து
இன்னிலத்தி லிருக்குமட்டுஞ் சொற்பமாக
யிதைவிற்றுச் செலவு செய்து யிருந்திடாயே. (189)

இருந்திடவே யிசுக்கைக்குச் சொன்னவாதம்
யியல்பான தவப்பயனால் கிட்டும்பாரு
வருந்திட்டுத் திரிந்தாலோ வாதமாகும்
வடிவாக வாதந்தான் யெளிதிலாகும்
கரந்திட்ட பால்போலே சொன்னநேர்மை
கருத்துவைத்துப் பாகமதைக் கண்டுகொள்ளு
பருந்துபோல் திரியாதே பாகம்பாரு
பதிவாக யாகோபு பலன்சொன்னாரே. (190)

கெந்திச்செம்பு

பலனாக யின்னமொரு செந்திச்செம்பு
பகரக்கேள் பகரிலது வேதையாகப்
பிலனாகத் துருசியது பலமும்பத்து
பேசரிய காந்தமது பலமும்பத்து
அலனாகப் பழச்சாறு விட்டு ஆட்டி
அடைவாக வில்லைகட்டிக் கதிரில்வைத்து
தலனாக உப்புடனே சுண்ணம்பிட்டுத்
தாட்டிகமாய்க் கவசமிட்டுத் தன்மைகேளே. (191)

தண்மைகேள் புடமிட்டு யெடுத்துப்பாரு
தாட்டிகமாய்க் கரிபோலே தூளுமாகும்
வண்மையாய்க் குகையிலிட்டு உருக்கச்சத்து
வகையான வெங்காரம் யெட்டிலொன்று
உண்மையாய்க் குடுத்துருக்கி யெடுத்துக்கொண்டு
உறுதிபெற யிடைசாதி கொடியோன்போட்டு
நன்மையா யரைபாணி வில்லைகட்டி
நலமாக ஓட்டிலிட்டுப் புடத்தைப்போடே. (192)

புடம்போடச் செம்புதான் விலகிநிற்கும்
போக்கான வெங்கார யிடையேசேர்த்து
தடமாக மேலூத்தா யுருக்கிக்கொண்டு
தக்கதோர் செம்பாகும் யியம்மேலே
வடமாகக் கவசம்போற் கட்டிநிற்கும்
வடிவாகத் தட்டியே கல்வமிட்டு
அடமாகச் சுடர்க்கொடியோன் பாதிசேர்த்து
அன்பாக அரைத்துவில்லை காயவையே. (193)

காயவைத்துப் புடம்போட்டுக் காரங்கூட்டிக்
கணக்காக உருக்கிடவே செம்புமாகும்
நாயமார் சொன்னபடி சொல்லக்கேளு
நலமாக யிச்செம்பு பலமுமொன்று
மாயவே தங்கமொன்று வெள்ளியொன்று
வடிவாகமூன்றுமே உருக்கி நீயும்
தாயகமாய்த் தட்டியே தகடாய்ப்பாரு
தண்மையா யாகோபு தாக்கினரே. (194)

தாக்கினர் கல்லுப்புப் பலமும்பத்து
தடையறவே மேனியென்ற சாறுதன்னால்
வாக்கியே அரைத்துநீ புடமுமிட்டு
வகையாக நாலாகப் பிரித்துக்கொண்டு
ஆக்கியே ஒருபங்கு தகட்டின்மேலே
அறமாகக் கீழிட்டுப் புடத்தைப்போடு
யோக்கியமா யுப்பை நீ தள்ளிப்பாரு
உறுதியா யதரெழும்பும் உண்மையாமே. (195)

உண்மையா யிப்படிக்கு அதரெடுத்து
உறுதிபெறப் பலம் நிறுத்து வைத்துக்கொண்டு
தண்மையாய் நாத்தமது முக்காலாகும்
தடையறவே வீரமது பலங்காலிட்டு
வண்மையா யரைத்துமே பூச்சாற்றாலே
வடிவாக வில்லைகட்டிக் கதிரிலிட்டு
நன்மையா யகலில்வைத்துப் புடமுமிட்டு
நலமாக யெடுத்துமே நாட்டங்கேளே. (196)

நாட்டமாய்க் குருவாகுங் குருவைத்தானும்
நலமான வெள்ளியெட்டு உருக்கி நீயும்
காட்டமா யிக்குருவு ரெண்டுதாக்கு
கனகமாந் தங்கமது கருத்துள்ளோருக்கு
வாட்டமா யுப்புக்குங் காவிக்குந்தான்
வடிவாக யிறங்குமது நல்லதாகும்
பாட்டிலே பாடினாற் போலேசெய்தால்
பலனாகும் வாதியற்குப் பரிசுதானே. (197)

பரிசாக யிவ்வேதை நிசமதாகும்
பதைபதைத்துத் திரியாமற் பாகமாக
வரிசையாய்ச் செய்துமே முடித்துக்கொண்டு
வளமாக நபிமாரைப் போலே நீயும்
உரிசையா யிருந்துநீ தொழிலைப்பாரு
உற்றுமே அல்லாவைத் தொழுதுநீயும்
முரிசையாய் முப்பொழுதுந் தொழுதுகொள்ள
முத்தியுண்டு நிசமாகு முடிவுதானே. (198)

முடிவான பாகத்தை விட்டு நீயும்
முதல்போச்சு தென்றுமே முடிவுசொல்லி
தடியாகத் திரியாதே அலைந்தலைந்து
தாட்டிகமாய் நூலைத்தான் விரும்பிப்பாரு
வடிவாகச் சத்தைநீ சோதித்தேறு
வணக்கமுருஞ் செம்புதான் வெளியாய்ப்போரும்
குடிகாா னாய்த்திரிந்து அலையவேண்டாம்
கொள்ளையோ கொள்ளையிந்த வாதந்தானே. (199)

வாதந்தான் செய்வதுவும் அருமையல்ல
மகத்தான கைபாகம் வருகவேணும்
சூதந்தான் கட்டுவது அருமையல்ல
துடியான துருசதுவை நீத்தவேணும்
வேதந்தான் படிப்பதுவும் அருமையல்ல
வெற்றிபெற நெஞ்சுதனி லிருத்தவேணும்
காதந்தான் நடப்பதுவும் அருமையல்ல
காலிருந்தால் நடக்கலாம் கண்டுகொள்ளே. (200)

கண்டுகொள்ளு சத்தைத்தான் கருணைகூர்ந்து
கனகமய மாகுமது கருதிப்பாரு
தொண்டுபடும் நபிமாரைத் தொழுதுபோற்று
துணையாகப் பத்தியே தொழுதுநீயும்
பண்டுமே முன்னிருந்த மனிதர்போலே
பக்குவமா யிருந்துநீ பாரிலோர்க்கு
மூண்டுகள்தான் பண்ணாமல் விற்றுநீயும்
முனிவாகக் காலத்தைத் தள்ளிடாயே. (201)

தள்ளிடவே சத்துவகை முன்னேபாரு
தாபித்து அதன்பின்னே செம்பெடுத்து
துள்ளியே திரியாதே மதியிற்தாக்கு
துப்பரவாய்த் தங்கத்தை யிடையே சேர்த்து
முள்ளிபட விற்றுமே செலவு செய்து
முடியுமட்டுஞ் செந்தூரம் பண்ணித்திரு
கள்ளிபோற் றிரியாதே காட்டொணாது
கருத்துறவே யாகோபு சொன்னவாறே. (202)

சொன்னதொரு முன்னூறுஞ் செயலறிந்து
துடியான கைபாக வரிசைகண்டு
நன்னயமாய்ச் சரக்கினுட வலுவறிந்து
நாடியே சத்துருமித் துருவறிந்து
இன்னதெனச் சேர்க்கையுட நிதானம்பார்த்து
யிதமான பொருளறிந்து நிறையுங்கண்டு
பொன்னைவிற்குஞ் செட்டிகையி லேறிற்றானல்
பூவுலகில் ராசாவாம் பிரியமாமே. (203)

பிரியமாய் நூலைத்தான் படித்துந்தேறி
போக்கோடே கினைவதனி லிருந்திநீயும்
அறிவாலே கண்டுநீ சரக்கைத்தொட்டு
ஆடினால் பலனாகும் அறிந்துகொள்ளு
சரிவரவே யிதுவெல்லாம் அறியாமூடர்
சாஸ்திரங்கள் பொய்யென்று தவித்துயேங்கி
உரியிலே நெய்யிருக்க அலைவார்பாலர்
உற்றுணர்ந்து பார்த்தாக்கால் சித்தியாமே. (204)

துருசுச்சத்து

செய்கைதா னின்னமொரு சத்துமார்க்கம்
செயமாகச் சொல்லுகிறேன் தேசத்தோர்க்கு
பையவே யிதுவெகுவு முன்னேபாரு
பதைக்காதே துடிதுடித்துத் திரியாதப்பா
வையகத்தில் பதைபதைத்தா லெல்லாம்பாழாம்
வடிவான சித்தியில்லை வண்மையில்லை
கையினாற் தொட்டதெல்லாம் கரியுமாகும்
கனமாகப் பொருமையாய்ச் செய்துகொள்ளே. (205)

பொறுமையாய்ச் சத்துவகை புகலக்கேளு
போற்றியெடு நீலனது பலமும்பத்து
வறுமையாய் நாறும்பூ பலமும்யேழு
வடிவான அரைபொடியும் புதிதாய்ராவி
கறுமையா எலுமிச்சம் பழச்சார்தன்னில்
கனிவாக நாள்மூன்று ஊறவைத்து
உறுமையாய்ப் பாணிவிட்டு அலம்பிநீயும்
உரையாகப் பலமொண் டரையும்போடே. (206)

போட்டுமே கல்வத்திற் பழச்சாறாற்றி
போக்கோடே நாளெட்டு அரைத்துநீயும்
காட்டுமே வில்லைகட்டிக் கதிரில்வைத்து
கனிவாக வில்லைக்குக் கவசங்கேளு
நீட்டுமே சுண்ணாம்பு உப்புநேரே
மிதமாக மேனியென்ற சாற்றாலாட்டி
வாட்டுமே வில்லைக்குக் கவசங்கட்டி
வடிவாகப் புடமிட்டு யெடுத்துப்பாரே. (207)

எடுத்துமே மேற்கவசந் தள்ளிவிட்டு
யிதமாக வெங்காரம் யெட்டிலொன்று
தடுத்துமே விட்டரைத்துக் குகையிலிட்டு
தாட்டிகமா யுருக்கிடவே உருகும்பாரு
அடுத்துமே கல்வமிட்டுக் கொடியோன்பாதி
அடைவாகச் சேர்த்துமே பூச்சார்விட்டு
படுத்துமே அரைசாமம் பணிரெண்டாகும்
பதிவாக வில்லைபண்ணிக் கதிரில்வையே. (208)

கதிரில்வைத்துக் கவசமது சொல்லக்கேளு
கனிவாகக் கல்லுப்புச் சேருநாலு
வதியாக மேனியென்ற சாற்றைவிட்டு
வடிவாக அரைத்துவில்லை புடமுமிட்டு
கெதிபெறவே கல்வமிட்டு மேனிநீரால்
கெட்டியா யரைத்துவில்லை சொல்லக்கேளு
பதிவாக முன்வில்லை மேலேயங்கி
பகட்டியதைக் கட்டியே பாகங்கேளே. (209)

பாகமென்ன மேற்கவச மண்ணுசெய்து
பதிவாகப் பெரியபுடம் போட்டெடுத்து
யோகம்வரச் சங்காணி யிடையேசேர்த்து
உண்மையா யிருசாம மாட்டிப்பின்பு
தாகமாய் வில்லைகட்டிக் கதிரிவிட்டு
தாட்டிகமா யகலிவிட்டுப் புடமுமிட்டு
ஆகவே புடமாறி யெடுத்துநீயும்
அடைவாக உலையிலிட்டு உருக்கிக்கொள்ளே. (210)

உருக்கிடவே செம்பதுவும் உருகியுள்ளே
உண்மையாய் மேலேதான் சத்துநிற்கும்
அருக்கிடவே செம்பைத்தா னெடுத்துக்கொண்டு
அடைவாகச் சத்தெல்லாங் கல்வமிட்டு
நருக்கியே பாதிநீ கொடியோன்சேர்த்து
நலமாகப் பூச்சாறு நல்கவாட்டி
பருக்கியே கதிரில்வைத்துக் காயப்போடு
பதிவாக யாகோபு பயின்றார்தாமே. (211)

பயின்றதொரு அகலிவிட்டுப் புடத்தைப்போடு
பதிவாக யெடுத்துமே பகரக்கேளு
நயின்றுமே சந்தாணி யிடையேசேர்த்து
நலமாக அரைத்துமே யிடுசாமந்தான்
வயின்றுமே வில்லைகட்டிக் கதிரில்வைத்து
வளமாகப் புடம்போட்டு உருக்கித்திரு
தயின்றுமே முன்போலச் செம்புமாகும்
தாட்டிகமாய்ச் செம்பெடுத்துப் புரம்பாய்வையே. (212)

வைத்திடவே சத்துத்தா னிருந்துதானால்
வாகாக முன்போலச் செய்துதிரு
உய்த்திட்டுச் செம்பெல்லாங் காரஞ்சேர்த்து
ஒழுங்காக உருக்கியே செம்பைப்பார்த்தால்
நய்த்திட்டுச் சூரியன்போல் நிறமுமாகும்
நபிமார்க ளாடுமொரு செம்புதன்னை
பைத்திட்டு வேதையிதில் கவரோகோடி
பாதையிது ரெம்பவுண்டு பரிந்துகேளே. (213)

பரிந்துமே மாசற்ற வெள்ளிஊதி
பதிவாக யெட்டுநிறை நிறுத்துக்கொண்டு
வரிந்துமே அயச்செம்பு ரெண்டுதாக்கு
வர்ணமது பொன்போலே மருவியாகும்
கரிந்துமே யிந்தநிரை தங்கச்சேர்த்துக்
கனகமய் மாகவே உருக்கித்திரு
பிரிந்துமே மாத்ததுவும் யெட்டுமாகும்
பேசாதே யெடுத்துவித்துச் செலவுசெய்யே. (214)

செய்யவே மாத்ததுவும் உசத்தியாகச்
செபமாகச் சொல்லுகிறே னுற்றுக்கேளு
பையவே அயச்செம்பு பலமுங்காலு
பதிவாகத் தங்கம்கால் பரிந்துருக்கி
மெய்யாகத் தகடடித்து ராவிநீயும்
மேன்மைபெறக் கல்வமிட்டு சொல்லக்கேளு
தையவே கெந்திபலம் முக்காலிட்டு
தலமான வீரமது பலமுங்காலே. (215)

பலங்காலு யிட்டுமே பழச்சாற்றாலே
பதியஅரை நாளெட்டு மையதாக்கிக்
கலனாக அரைத்துமே வில்லைகட்டிக்
கனிவாக ஓட்டிலிட்டுச் சீலைசெய்து
பிலமாகப் புடமிட்டு யெடுத்துப்பாரு
பெருமையாய்க் கரியாகும் பின்புநீயும்
அலமாகக் கரியென்று மயக்கவேண்டாம்
அன்பாகக் கருப்புத்தான் கனகமாமே. (216)

கனகமாங் கரிநிரைக்கி நாலத்தொன்று
கடியதொரு தாளகத்தைச் சுத்திபண்ணி
வனகமாய்ச் சேர்த்தரைத்துப் பூச்சாற்றாலே
வடிவாகச் சிவக்கமட்டும் புடமுமிட்டு
தனமாக யெடுத்துப்பார் செந்தூரமாகும்
தருகாவில் வைத்துமே தொழுதுநீயும்
இனமாக வெள்ளியைத்தான் வங்கத்தாலே
யின்பமுற ஊதியே சொல்லக்கேளே. (217)

சொல்லவே மாசகற்றிக் குற்றம்நீக்கிச்
சுருதிபெறப் பலம்பத்து நிறுத்துநீயும்
வல்லமையாய்ச் செந்தூரம் பலமும் ஒன்று
வடிவாக உருக்குமுகந் தன்னிலீய
நல்லாக மதிபழுக்கு மாத்துப்பத்தாம்
நானிலத்தில் விற்றுமே செலவுசெய்து
புல்லறிவா யிருந்துமே நாளைப்போக்கு
புகலாதே ஒருவருக்குஞ் சொன்னேன்பாரே. (218)

சொன்னதொரு கைபாகச் செந்தூரத்தைத்
துடியாகத் தேனிலிட்டு மண்டலந்தான்
நன்னயமா யுண்டிடவே சொல்லக்கேளு
நாடிவரும் நரைதிரையும் நாடாதோடும்
இன்னிலத்தில் நோயெல்லாங் கடலேபுக்கும்
யிதமான நரம்பிருக்கும் தேகமின்றும்
கன்னல்போல் பெலனுகும் கண்டுசெய்தால்
கனமாக விந்திறுகும் கண்டுபாரே. (219)

கண்டுபார் செந்தூர பாகந்தன்னைக்
கணக்கறிந்து கடைசிதனிற் சொன்னேன்பாரு
பண்டுமே பழகினது போலேசெய்தால்
பலனுண்டு பக்குவமாம் பரிந்துநீயும்
கொண்டுபார் மதிபழுக்கும் வேதையாகும்
குடிலங்க ளில்லாது குணமாம்பாரு
தொண்டுசெய்தால் நபிமார்கள் சொல்வாரப்பா
தொல்லுலகில் ரசவாதி தொய்வுமாமே. (220)

ஆமேதான் தங்கத்தைக் கண்டுநீயும்
அடைவாக மனதுதனில் கெற்சிக்காதே
நாமேதான் கெற்சித்தால் மனிதர்காண்பார்
நலமாக உன்னையவர் கொல்வாரப்பா
பூமேவு நிலந்தனிலே யிருக்கவொட்டார்
பூதலத்தில் அரசனுக் கினையினாலே
தாமேதான் தொந்தரவு பட்டுநீயும்
தாட்டிகமா யுயிர்போகுந் தன்மைபாரே. (221)

தன்மைபார் பொன்விக்கப் போனால்நீயும்
தாட்டிகமாய்ச் செட்டியவன் செய்யும்வண்மை
உண்மையாய் நல்லவன்போல் பேசுவான்பார்
உறுதியாய் பொன்னெடுத்துக் காட்டச்சொல்லி
பெண்மையாய் முகம்பார்ப்பான் பேச்சைக்கேட்பான்
பெருமையாய் வாதியென்று அறிந்தானானால்
வண்மையாய்க் கல்லதுவும் ரெண்டுமாகும்
வடிவாகச் சுரசுரப்புக் கல்லுதானே. (222)

செட்டி மோசம்.

கல்லெடுத்துக் கொடுத்தபொன்னை அழுத்தமாக
கணக்கிட்டு வலுவாக உரைப்பானப்பா
வில்லெடுத்து யேறிட்டுப் பார்த்துப்பார்த்து
விரும்பியே மாத்தெட்டு யிருந்தாலப்பா
துல்லபமாய் மாத்தஞ்சு யிருக்குதென்று
துடியில்லை யென்று சொல்லித் தூக்கிப்பார்த்து
முல்லைமலர் போல்சிரிப்பான் வேண்டாமென்பான்
முடிந்தவனை விட்டுமே சொல்லக்கேளே. (223)

சொல்லவே மறுகடையில் போனபோது
சுருதிபெற யிந்தப்பொன் ஞானுரைத்தார்
நல்லவே கேட்டுமே யிருக்கும்போது
நானுரைத்தே னென்றுசொல்லிச் சிரித்துப்பின்பு
அல்லவே அவன்தானுங் கல்லில்ரெட்டி
அடைவாக உரைத்துமே பார்த்துப்பார்த்து
வல்லமையாய் வேண்டாங்கா ணென்றுசொல்வார்
வகையாக யிதுவெல்லாம் வளமைதானே. (224)

வளமையா யிப்படிக்குக் கொண்டுபோன
வகையான தங்கமதை உரைத்துரைத்துத்
தழமையாய் ஆளுக்குக் கொஞ்சம்கொஞ்சம்
தனைத்தேய்த்துப் பொன்னதுவைத் திருடிக்கொள்வான்
உளமையா யிப்படிக்குப் போகாமல்தான்
உறுதிபட வாதியென்று பேர்படாதே
கடமையாய்ப் பேர்பட்டால் வாதம் வந்தால்
கடிதாக ஒருவருந்தான் நம்பார்பாரே. (225)

நம்பிக்கை யாகவே சொல்லக்கேளு
நலமாக ஒருசெட்டி உனக்குஉண்மை
வம்புசெய்யாப் பேர்பார்த்து அவனைநம்பி
வடிவாக அவனுக்கு கொஞ்சம்பொன்னு
தம்பமறக் கொடுத்திடவே விற்பானப்பா
தடையறவே யிப்படிக்கு வித்துவித்து
கம்பம்போ லிருந்துவிடு உண்டுதேரு
கருணைபெற யாகோபு கருதினாரே. (226)

கருதியே கன்றுக்குப் பாலுவிட்டுக்
கருதியே பால்கறந்த கதைபோலொக்கும்
வருதியே தும்பைவிட்டு மாட்டைத்தேடும்
வடிவொக்கும் வாதிமார் வழக்கமாகும்
நிருதியே தோணுத வாதிக்குந்தான்
நிலையான துவரையுட பருப்பைக்கண்டால்
பருதியே மாத்தேழு யென்றுசொல்லிப்
படித்துமே சொல்லியே புலம்புவாரே. (227)

புலம்புவார் தெரியாத வாதிமார்கள்
புவியிலுள்ளே வாதியென்று பேரெடுப்பார்
வலம்புவார் பேரெடுத்தால் ஒருபோதுந்தான்
வழியான போததுவு மறையாதப்பா
குலம்புகுந்த வாரதுபோல் கொள்கையாகும்
கொம்பிழந்த மந்திபோல் திரிந்தலைந்து
தலம்புகாா செட்டிகையில் விற்கப்போகார்
சவங்கலாய்த் திரிந்தலைந்து மாளுவாரே. (228)

மாளாமல் வாதிக்கு நடத்தைகேளு
வடிவான பரபரப்பு விடவும்வேணும்
கேளாமல் கண்டபொருள் மறைக்கவேணும்
குடிக்காம லுலகத்தி லிருக்கவேணும்
தாழாமல் வயித்தியரைப் போலேசென்று
தாட்டிகமா யாண்டவனைத் துதித்துக்கொண்டு
பாழாகப் போகாது உலகத்தோர்கள்
பத்தியாய் நம்புவார் பதமதாமே. (229)

பதமாகப் பொய்சொல்வார் நிலைத்தவாதி
பக்குவமாய்ப் பேசார்கள் பத்தியாளர்
விதமாக நடவார்கள் பொய்சொல்லார்கள்
வேதத்தைப் படிப்பார்கள் பிரியமாகக்
கதமாக ஒருவருடன் பேசமாட்டார்
காரியத்தைப் பார்த்துமே கண்டுகொள்வார்
இதமாக வெவ்வுயிருந் தன்னுயிர்போல்
இருந்துமே பதவிதனி லிருப்பார்தானே. (230)

இருப்பார்கள் மக்காவின் தேசந்தன்னில்
யிதமான நபிமார்கள் கோடாகோடி
மருப்பாக வாதத்தைப் பேசிடார்கள்
மகான்களுட அருமையைச் சொல்லப்போகா
வெருப்பாக வேதத்தை பேசிக்கொள்வார்
விரித்துமே மனதுதனி லாசையுற்றுத்
துரும்பாகத் தானுக வாறுசெய்வார்
துடியாக அல்லாவைத் துதிப்பார்பாரே. (231)

துதிக்கவே வாதத்தைச் சொன்னேன்பாரு
　　துடியாக யெல்லோர்க்குஞ் சொல்லவில்லை
பதிக்கவே கோடியிலே ஒருவருக்குப்
　　பாவித்தே னவர்கண்டு பிடித்துக்கொள்வார்
கதிக்கவே ஒருவருக்குங் காட்டமாட்டார்
　　காரியத்தைப் பார்த்துமே கருதுவார்கள்
நதிக்கவே சிறுபிள்ளை போலிருப்பார்
　　நாதாந்த யாகோபு நலஞ்சொன்னாரே. (232)

தாளகச்செம்பு.

நலமாக யின்னமொன்று தாளகத்தில்
　　நாடியே செம்பெடுக்க நடக்கைகேளு
வலமாக வீரமொடு காரமோடு
　　வடிவான தாளகமுந் துருசுநாலும்
கலனாக வகைக்குஒரு பலம்நிறுத்துக்
　　கடிதாகப் பழச்சாறு பிழிந்துவிட்டுத்
தலமாக நாலுநா ளரைத்துமைபோல்
　　தாட்டிகமாய்ப் பின்னுமொரு தகமைகேளே. (233)

தகைமையா யரைபொடியும் பலமோஒன்று
　　தனியாகப் பழச்சாற்றி லூறவைத்து
அகைமையாய் மூன்றுநாள் சென்றபின்பு
　　அதட்டியே கழுவியதை உலரப்போட்டு
நகைமையாய் முன்னரைத்த மருந்தினோடே
　　நாட்டியே சேர்த்தரைத்து வில்லைகட்டி
வகைமையாய்க் கதிரில்வைத்துக் காயவைத்து
　　வடிவாக ஓட்டிலிட்டுப் புடத்தைப்போடே. (234)

புடம்போட்டு யெடுத்துமே குகையிலிட்டுப்
　　புகழாக உருக்கிடவே சத்துமாகும்
திடமாக வெங்கலம்போல் மணியுமாகும்
　　திட்டமாய்க் கல்வமிட்டு வெங்காரந்தான்
அடமாகக் கல்வாசி சேர்த்தரைத்து
　　அன்பாகக் கதிரில்வைத்துப் புடமுமிட்டு
நடமாக குகையிலிட்டு உருக்கித்திரு
　　நாடியே கசடகற்றி யெடுத்துக்கொள்ளே. (235)

எடுத்துமே சத்தினிடை பாதிதானும்
யிதமாகக் கொடியோனைப் பாதிசேர்த்து
அடுத்துமே பூச்சாறு விட்டரைத்து
அடைவாக வில்லைகட்டிக் கதிரில்வைத்து
நடுத்துமே ஓட்டிலிட்டுப் புடமூமிட்டு
நலமாக வெங்கார மிடையேசேர்த்துக்
கடுத்துமே சேர்த்துஅரை பூச்சாற்றாலே
கடிதாக வில்லைபண்ணிக் கதிரில்வையே. (236)

கதிரில்வைத்து ஓட்டிலிட்டுப் புடமுமிட்டுக்
கணக்காக யெடுத்துமே சொல்லக்கேளு
பதிவாகப் புதக்குகையி லிட்டுருக்கு
பண்பாக உருகியது செம்புமாகும்
விதியாளி யானுக்கால் சொல்லக்கேளு
விதமான செம்புநிறங் கதிர்போலாகும்
கெதியாக யெடுத்துமே மதியிலெட்டு
கெடிபடவே ரெண்டுமே உருக்கிடாயே. (237)

உருக்கிடவே பசுமைபோ லாறுமாத்து
உண்மையிடைக் கிடைதானுந் தங்கஞ்சேர
நறுக்கிடவே மாத்தெட்டுக் கானும்நன்றாய்
நலமாக வித்துமே உண்டுதேறு
பறுக்கிடவே யிதைச்செலவு பண்ணிக்கொண்டு
பதியான செந்தூரம் பண்ணநன்று
கருக்கிடவே பாகமாய்ச் செய்துகொள்ளு
கதிபெருக யாகோபு கருணைதானே. (238)

கருணையாய்த் தாளகத்தின் செம்புஒன்று
கனத்ததோர் தங்கமென்று சேர்த்துருக்கி
அருணையாய்த் தகடுதட்டிச் சொல்லக்கேளு
அடைவான மனோசிலையும் வீரம்கெந்தம்
வருணையா யிடைக்கிடைதான் பூச்சார்விட்டு
வடிவாக யிருசாம மரைத்துநீதான்
பருணையாய்த் தகடுதனில் பூசிப்பூசிப்
பதியவே புடம்போட்டு யெடுத்துக்கொள்ளே. (239)

எடுத்திட்டுப் பார்க்கையிலே நொறுங்கும்நன்றாய்
　　யிதமாக அரைத்துமே வில்லையாக்கி
அடுத்துமே ரவியில்வைத்துக் காயப்போடு
　　அடைவாகப் புதுஅகலில் வைத்துமூடி
நடுத்துமே புடம்போடு செந்தூரமாகும்
　　நலமான செந்தூரங் கண்கொள்ளாது
விடுத்துமே மதிப்பத்து ரெண்டுசேர
　　விதமாகத் தங்கமாம் விடுத்துப்பாரே. (240)

விடுத்துமே யிதைவித்துச் செலவுசெய்து
　　வீணருடன் பேசாதே விரும்பிநீயும்
அடுத்துமே பணவிடைதான் மண்டலத்தில்
　　அடைவாக உண்டபின்பு சொல்லக்கேளு
நடுத்துமே நல்லெண்ணெய் கைப்புத்தள்ளு
　　நலமாக உண்டிடவே நாட்டங்கேளு
விடுத்துமே கல்தூளுந் திரோகந்தானும்
　　வேதாந்த யாகோபு விதஞ்சொன்னாரே. (241)

சொன்னதொரு அரிதாரப் பொன்னுக்குத்தான்
　　சுருதிபெற ஆணியுண்டோ சொல்லுவீரா
நன்னயமாய் மாத்தேறும்பீர்க்கம்பூப்போல்
　　நலமாகத் தானிருக்கும் அந்தப்பொன்னு
தின்னயில்லாப் பொன்வைத்துத் தொழுதுபோற்று
　　சிறப்பாக யிவ்வருணம் சொல்லப்போகா
கன்னல்போல் யித்துடனே வெள்ளிசெம்பு
　　கனமாகச் சேர்த்திடவே பத்துமாமே. (242)

பத்தான தாளகத்தின் செம்புதன்னைப்
　　பதிவான நயிமார்கள் வைத்துக்காட்ட
சித்தாக நான்வைத்து கடையில்விற்று
　　செலவளித்தேன் கைகுளிரச் சித்திமெத்த
மூத்தான அரிதாரச் செம்புபோல
　　மூவுலகில் கண்டதில்லை முறையோகோடி
சத்தாக யிருந்ததொரு சத்துதன்னைத்
　　தடையறவே செம்புபண்ணச் சாச்சியாமே. (243)

சாச்சியில்லாப் பாகமாய்ச் செய்துகொள்ளு
சவுங்கலாய்த் திரியாதே பெரியோர் தன்னை
வாச்சியாய் வணங்கியே கேட்டுக்கொள்ளு
வடிவாக நபிமார்க ளாடுமாட்டு
தாச்சிவா ராதபடி செய்துகொள்ளு
தடையில்லாப் பொன்னுகும் சார்ந்துபாரு
பாச்சியே வெள்ளிதன்னில் பொன்னெடுத்துப்
பகரிது யாகோபு பலன்சொன்னுரே. (244)

மயில்ரோமச் செம்பு.

பலனுக யின்னமொரு ரோமச்செம்பு
பாகமாய்ச் சொல்லுகிறேன் பரிந்துகேளு
பிலனுக மயிலிறகு குச்சிபோக்கிப்
பிரித்துநீ மயிரதுவும் பலமும்பத்து
அலனுக யிரும்பான சட்டியிட்டு
அதிலூத்து நல்லெண்ணெய் ரோமம்போட்டுக்
கலனுக உருகையிலே அரபொடியும்பத்து
கடிதாகப் பிரட்டிநீ யெடுத்துக்கொள்ளே. (245)

எடுத்தபின்பு சொல்லுகிறே னூதக்கேளு
யிதமாகத் துருசுபலம் ஐம்பதாகும்
அடுத்துமே செம்புபல முப்பதாகும்
அடைவான வெங்காரம் பலமும்அஞ்சு
தொடுத்துமே நல்லெண்ணெய் சேருபத்துச்
சுயமாக விட்டுமே அயச்சட்டியிட்டுப்
படுத்துமே கொதிக்கவிடு கரைந்துபோகும்
பதிவாக மொருமொருப்பா யெரித்துவாங்கே. (246)

வாங்கியே முன்கருக்கும் அரபொடியைத்தான்
வடிவாகப் பிசறிவைத்து மார்க்கங்கேளு
தாங்கியே புதக்குகையி லிட்டுமூடித்
தன்மைபெற உருக்கிடவே சத்துமாகும்
தேங்கியே பின்னுமொரு திரமுமிட்டுத்
திரளாம லுருக்கியே சத்தெடுத்துப்
பாங்கியே மருபங்கு கூட்டிஊது
பதிவாக உருகியது மணியுமாமே. (247)

மணியெடுத்து உடைத்துப்பார் வெங்கலமாய்க்காணும்
மயமாக வெங்கார மிட்டுநன்றாய்த்
தனியாக உருக்கியெடு கசடகற்றித்
தாக்கான மணியதனைக் கல்வத்திட்டுக்
கனியாகக் கொடிவேலியைப் பாதிசேர்த்துக்
கணக்காகப் பூச்சாற்றா லரைத்துவில்லை
வணியாகக் கதிரில்வைத்துக் காயப்போடு
வடிவாக ஓட்டிவிட்டுப் புடத்தைப்போடே. (248)

புடம்போட்டு யெடுத்துப்பார் கருப்பாய்நிற்கும்
பின்புதான் வெங்காரம் பாதியிட்டு
நடம்போட்டு பூச்சாறு விட்டுஆட்டி
நலமாக வில்லைபண்ணிக் காயவைத்து
வடம்போட்டு ஓட்டிவிட்டுப் புடத்தைப்போட்டு
வடிவாக யெடுத்துமே மார்க்கங்கேளு
தடம்போட்டு குகையிலிட்டு உருக்கிப்பாரு
தடையறவே மயூரமது செம்புமாமே. (249)

செம்பெடுத்துப் பிரம்பாலே வைத்துக்கொண்டு
சிறப்பாகக் காரெடுத்துக் கல்வத்திட்டு
நம்பியே கொடிவேலியைப் பாதிவைத்து
நலமாகப் பூச்சாறு விட்டுஆட்டிக்
கம்பமற வில்லைகட்டிக் கதிரில்வைத்துக்
கணக்காகப் புடமிட்டு யெடுத்துநீயும்
தம்பிரான் செயலாலே சந்தானி கூட்டு
தடையறவே பூச்சாறு தன்னிலாட்டே. (250)

ஆட்டியே புடமிட்டு உருக்கச்செம்பாம்
அடைவாகச் செம்புதான் வருகுமட்டும்
கூட்டியே யிப்படிக்கு அரைத்தரைத்துக்
குணமாகப் புடமிட்டு உருக்கித்திரு
நாட்டியே செம்பெல்லா மெடுத்துக்கொள்ளு
நலமாகக் காரமிட்டு உருக்கித்திரு
வாட்டியே கசடகலும் பொன்போலாடும்
வடிவான செம்பதுதான் மார்க்கமாமே. (251)

மார்க்கமாய்ச் செம்பெடுத்து மோதிரம்பண்ணி
வடிவாகப் போட்டுமே சொல்லக்கேளு
ஆர்க்கமாய் நல்லரவு பாம்புதன்னை
அடைவாகப் பிடித்துப்பார் கடித்துதானால்
தார்க்கமாய் விஷங்களது யேறிடாது
தடையறவே பாம்புதான் செத்துப்போகும்
கார்க்குமே பாம்புதனைக் கூப்பிட்டாக்கால்
கடைகெட்டு வந்துவிடுங் கருதிப்பாரே. (252)

கருதியே யிச்செம்பை யெடுத்துநீயும்
கனமாக வெள்ளிதனை ஊதிக்கொண்டு
வருதியே மாசுத்த வெள்ளியாக்கி
வடிவாக யெட்டுருக்கு முகத்திற்றானும்
பருதியே ரெண்டுகுடு செம்பைத்தானும்
பதிவாக வாங்கியது உருகிநிற்கும்
கருதியே பொன்போலே ஆடும்பாரு
நலமாக உருக்கியே யெடுத்துக்கொள்ளே. (253)

எடுத்துமே யிந்தயிடை தங்கத்தாயை
யிதமாக வைத்துநீ உருக்கிப்பாரு
நடுத்துமே மாத்ததுவும் யெட்டேகாலாம்
நலமாக யிதைவித்துச் சிலவுசெய்து
விடுத்துமே உண்டுடுத்தி யிருந்துகொண்டு
உண்டான யிச்செம்பு பெரியவேதை
அடுத்துமே செய்திடவே பலனுமாகும்
ஆதியாம் உருதியிது அருமைகேளே. (254)

அருமையாய் மயிலிறகுச் செம்புதன்னை
அடைவாகப் பலமுருக்கிப் பின்புநீயும்
வருமையாய்த் தங்கமது பலமுமொன்று
வடிவாகச் சேர்த்துருக்கித் தகடடித்துப்
பருமையாய்க் கெந்தியுடன் சூடன்தானும்
பாங்காக வீரமுடன் மூன்றுமொன்றாய்
கருமையாய் பழச்சாறு விட்டுச்சாமம்
நலமாக அரைத்துமே நாட்டக்கேளே. (255)

காட்டமாய் மூன்றுகட்டின் மேலேகட்டி
நலமாக நெருக்கமட்டும் புடமுமிட்டு
கூட்டமாய்க் கரிபோலே தூளாய்ப்போனால்
குணமான மனோசிலைதா னளவிலொன்று
தேட்டமாய்ச் சேர்த்துஅரை அல்லிப்பூச்சார்
திறமாக அரைத்துவில்லை காயவைத்து
மூட்டவே ஓட்டிலிட்டுப் புடத்தைப்போட
மூளியாகச் செந்தூர மாகும்பாரே. (256)

ஆகுமே செந்தூர முருக்கம்பூவாம்
அடைவாக மதிபத்துக் கொன்றுவிட்டால்
வாகுபெறத் தங்கமாம் பின்னையென்று
வகையாகச் சொல்லாதே மருவி நின்று
தாகுபெற வித்திட்டுச் செலவுசெய்து
தாட்டிகமா யுண்டுடுத்திப் பின்புநீயும்
பாகுபெற மனதுருகிப் பத்தியாக
பதிவாக நின்றவனே நபிமாராமே. (257)

நபிமாரா யானதொரு நட்புக்கேளு
நலமான ஞானத்தைப் படித்ததாலே
கபியான ஆண்டவனைத் தொழுததாலே
கடிதான வேதத்தைக் கற்றதாலே
வபியான பொய்மறந்த மார்க்கத்தாலே
வடிவான வாதங்கள் வந்ததாலே
அபிமான மாய்நடந்த அறிவினாலே
ஆதியாம் நபிமாரா யிருந்தார்தானே. (258)

இருத்திட்ட மயிலிறகுச் செம்புபோலே
யிதமான செம்பில்லை உத்துக்கேளு
வருத்திட்டு யிச்செம்பை யெடுத்துக்கொண்டால்
வாழ்வாகும் பொன்னுதான் குளிர்ச்சியாகும்
அருந்திட்ட குளிகைக்கு யித்தச்செம்பை
அடைவாகக் கொடுத்திட்டால் ஒளிவுமாகும்
பருத்துபோல் நடையாகும் பாரிலோர்க்குப்
பார்த்திட்டால் யெல்லாமுஞ் சித்தியாமே. (259)

சித்திபெற வேணுமென்றால் சத்தைப்பாரு
சிறப்பாகச் செம்பெடுத்து மதியிலூட்டு
புத்திவர வேணுமென்றால் செந்தூரத்தைப்
போக்கோடே உண்டிடவே பெலனுமாகும்
சத்தியமா யின்னூலில் வெளியாய்ச்சொன்னேன்
சார்ந்திட்டால் நபிமார்க்குத் தாட்சியில்லை
வித்தகராய்ப் படித்தாலே நீதியாகும்
விதமாக யாகோபு விளம்பினாரே. (260)

விரும்பியே தங்கத்தைக் கையில்வைத்து
விதமாகச் செம்பெடுத்துச் சேர்த்துருக்கி
அரும்பியே புடம்போடச் செந்தூரமாகும்
அடைவாக வைத்துமே உண்டுதேறு
கரும்புபோல் மதுரங்க ளாகும்பாரு
கனகமய மானதொரு செம்புமார்க்கம்
துரும்பதுதான் துணை வாருபோல
சொல்முறைகள் தவறாது செய்துபாரே. (261)

செய்துபார் தங்கமில்லாச் செந்தூரமெல்லாம்
சித்தியில்லை தூரத்தி லெறிந்துபோடு
பைதுபார் சத்துக்கு விரும்புயில்லாப்
பதிவான சத்தெல்லாந் தூரத்தள்ளு
நைந்துபார் பாகமில்லாச் செம்புவெல்லாம்
நல்லமதி பழுக்காது நாட்டுலோர்க்கு
வெய்துபார் யெனமில்லா வாதிமார்கள்
விதியான நூலில்லா வினையத்தோரே. (262)

வினையமென்ற நூலினுட வர்மம்பார்த்து
விதமாகக் கைபாக வரிசைகண்டு
இனையதுபோல் பொருக்கியே சேர்த்துநீயும்
இடமாகச் செய்தாக்கால் சித்தியுண்டு
கனைதலொடு நூலில்லா வாதம்பார்த்தால்
கசடாகும் ஒருபொருளுந் தெரியாதாகும்
சுனையில்நின்ற தண்ணீர்போ லாகும்நேர்மை
சுருக்காக நாட்டிலே காணலாமே. (263)

காணலாம் நபிமாரைக் கண்டுநீயும்
கலக்கமற்றுத் தொழுதுமே கருணைகூர்ந்து
வாணலாம் அவர்மனம்போல் வேலைசெய்து
வடிவாகத் தொண்டானால் சொல்லுவார்கள்
நாணவே சொல்வார்கள் பயமும்வேண்டாம்
நலமான கைமுறையை நாடிச்சொல்வார்
பூணவே பூண்டாக்கால் நினைவுதன்னில்
புகலறிய வாதவொளி காணலாமே. (264)

காந்தச் செம்பு.

காணவே காந்தத்தின் செம்புகேளு
கருத்தாகக் கைபாக வரிசைசொல்வேன்
யீணவே கல்காந்தந் தன்னைவாங்கி
யிதமான காணத்தின் கிஷாயமிட்டுத்
தோணவே அவித்துயெடு சுத்தியாச்சு
துடியாகப் பலம்பத்து நிறுத்துக்கொண்டு
வாணவே துருசியது முப்பதாகும்
வடிவான நாத்தமது பலமுங்கேளே. (265)

கேளுமே பலமிருபத் திரண்டுமாகும்
கெடியாகக் கல்வமிட்டுச் சொல்லக்கேளு
நாளுமே பழச்சாறுவிட்டுநன்றாய்
நாளாறு நாளரைத்து வில்லைகட்டிப்
பாளுமே போகாமல் கதிரில்வைத்துப்
பதிவாகக் கல்லுப்புச் சேருநாலு
தாளுமே மேனியென்ற சாறுவிட்டுத்
துப்பறவாய்த் தானரைத்துக் கவசங்கட்டே. (266)

கட்டியே அதின்பேரில் மண்ணுசெய்து
கதிபெறவே புடமிட்டு யெடுத்துப்பாரு
நட்டியே கரிபோலே தூளாய் நிற்கும்
நலமான தூளதனைக் குகையிலிட்டு
பட்டியே உருக்கிடவே மணியுமாகும்
பதிவான வெங்கலம்போல் சத்துமாகும்
தட்டியே யிப்படிக்குக் காரங்கூட்டித்
தடையறவே அஞ்சுதர முருக்கிடாயே. (267)

உருக்கிடவே கசடகற்றி யெடுத்துக்கல்வம்
உறுதியா யிட்டுமே சொல்லக்கேளு
கருக்கிடவே கொடியோனைப் பாதியிட்டு
நலமாகப் பூச்சாற்றால் நல்கஆட்டி
கருக்கிடவே நாளேழு அரைத்துவில்லை
கதிபெருகக் காயவைத்து ஓட்டிலிட்டு
பெருக்கிடவே புடம்போட்டு யெடுத்துக்கொள்ளு
பேசரிய வங்கத்தின் பெருமைகேளே. (268)

வங்கச் சுண்ணம்.

பெருமையாய்க் காரீயம் பலமும்நாலு
பேணியே கரண்டியிட்டு உருக்கிக்கொண்டு
அருமையாய் காய்ச்சலஞ்சு உப்புதன்னை
அடைவாகப் பாதியிடு கிண்டுகிண்டு
நருமையாய்ச் சாமமது சென்றபின்பு
நலமாக மஞ்சளது போலேகாணும்
வருமையாய்ப் பாகமது தானிருத்தி
வடிவாகச் சுரண்டியே மார்க்கங்கேளே. (269)

மார்க்கமாய்ச் சுரண்டியெடு பின்புநீயும்
மயங்காமல் முன்போட்ட வில்லைநாவில்
ஆர்க்கமா யொன்றிட்டுக் கரண்டிதன்னில்
அடைவாக உருக்கியே வருகும்போது
தூர்க்கமாய்ப் புடம்போட்ட காந்தச்செம்பை
துடியாக நெருங்கியே சொல்லக்கேளு
பார்க்கவே வங்கசெந் தூரந்தானும்
பதிவாக உருக்குமுகர் தன்னிலீயே. (270)

ஈய்ந்திட்டுக் குறடதனால் கிண்டிக்கிண்டி
யியல்பாகப் பின்பெடுத்துக் கல்வமிட்டு
வாய்ந்திட்ட அன்னமென்ற சோத்தாலாட்டி
வகையாகப் புடமிட்டு யெடுத்துக்கல்வம்
சாய்ந்திட்டு யிட்டுமே சோத்தாலாட்டி
சரியாக யிப்படிக்குப் புடமும்அஞ்சு
ஏய்ந்திட்டுப் புடம்போட்டு யெடுத்து நீயும்
யிதமாகக் குகையிலிட்டு உருக்கித்தீரே. (271)

உருக்கிடவே செம்பைத்தா னொட்டாது
உறவாக்கிப் பிடித்துமே யிழுத்துக்கல்வி
நருக்கிட்டு உருகியே மணியாய்நிற்கும்
நாதாந்த நபிமார்க ளாடுமாட்டு
கருக்கிட்டுக் காந்தமது வைத்திருந்த
கடிதான செம்பைத்தான் யியம்நன்றாய்ப்
பருக்கிட்டு யிழுத்துமே வைத்துக்கொள்ளும்
பதிவாகத் தட்டியே யெடுத்துக்கொள்ளே. (272)

எடுத்துமே நாளத்தி லிட்டுநீயும்
யிதமாகக் கொஞ்சமா யூதிப்போடு
அடுத்துமே யெடுத்துநீ வெள்ளியேழு
அடைவாகக் காந்தத்தின் செம்புமூன்று
குடுத்துமே தங்கமொன்று சேர்த்துஆறு
குணமான பொன்னைக்குங் கூர்ந்துபாரு
படுத்துமே மாத்தலவும் யெட்டுமாகும்
பதிவான யாகோபு பலன்சொன்னாரே. (273)

சொன்னதொரு காந்தத்தின் செம்புஒன்று
அடியான தங்கமொன்று சேர்த்துருக்கி
நன்னயமா யூதியே உருக்கிக்கொண்டு
நலமாகத் தகடடித்து நாட்டங்கேளு
சின்னயமாய் நாத்தமொடு சூடன்வீரம்
சிறப்பாக வகைக்கொன்று நிறுத்துநீயும்
கன்னல்போல் கல்வமிட்டு அரைநால்சாமம்
கருத்துறவே அஞ்சாகப் பிரித்துக்கொள்ளே. (274)

பிரித்துமே ஒருபங்கு பூச்சாறுலே
போக்கோடே அரைத்துமே தகட்டிற்பூசி
வரித்துமே காயவைத்துப் புடமுமிட்டு
வகையாகத் தகடைப்போற் சுருங்கும்போது
நரித்துமே பின்பொருக்கால் பூசிப்பூசி
நலமாகப் புடம்போடு நொறுங்கமட்டும்
கருத்துமே நொருங்கியதோர் தகட்டைத்தானும்
கல்வமிட்டு அரைக்கவே சொல்லக்கேளே. (275)

சொல்லவே நாலிலொன்று சிலையைச்சேர்த்துச்
சுகமாகப் பூச்சாற்றை விட்டுநேக
நல்லாக அரைத்துமே வில்லைகட்டி
நலமாகக் கதிரில்வைத்து ஓட்டிவிட்டு
மெல்லவே புடம்போட்டு யெடுத்துப்பாரு
மேன்மைபெறச் செந்தூரம் அருணன்போலாம்
கல்லமே பெரியகுரு வாகுமிந்தக்
கைகண்ட தொழிலையுந்தான் கருத்தாய்ப்பண்ணே. (276)

கருத்தாகச் செந்தூரம் வெள்ளிதன்னில்
கனிவாக யிருபத்து ஒன்றுயிய
வருத்தாக மாத்ததுவும் பதினாறும்
வடிவான தங்கமது வழக்கமெத்த
உருத்தாகச் சொன்னதினால் பலன்தானேது
உறுதிபெறப் பாகமாய்ச் செய்துகொள்ளு
பெருக்கவே செய்திட்டு விற்றுத்தேறு
பேதையர்போல் திரியாதே பேணிப்பாரே. (277)

பேணியே உலகத்தில் வாதமார்க்கம்
பிரட்டாக யிருக்குதென்று உலகப்பேய்கள்
நாணியே செய்திடுவார் ஒன்றுங்காணார்
நலமில்லாத் துற்புத்தி நினைப்பாரப்பா
தோணிபோல் புத்திதனி லெண்ணியெண்ணித்
துடியாகப் பேராசைப் பட்டுப்பட்டு
காணியே பேச்சுதென்பார் கரைகாணார்கள்
கருத்தில்லா உலகத்தில் மட்டைதானே. (278)

மட்டையாய்ப் புத்தியில்லா வியாபாரங்கள்
மடையர்போல் பண்ணியே சீவனத்தை
திட்டையாய்ச் செய்துமே சாம்பல்பூசி
நிலையில்லாச் செம்பினால் சாமிபண்ணி
விட்டகுறை வருமென்று கும்பிட்டேத்தி
வீணராய்ப் போகியே திரிவாரப்பா
சட்டைமுனி போலவே யிருந்தால்வாதம்
தான்வருகு மென்றுயா கோப்சொன்னாரே. (279)

சொன்னதொரு முனிவர்சித்தர் யோகியெல்லாம்
சொற்பெரிய வழலையென்றும் பூனீரென்றும்
நன்னயமாய்ப் பேரண்டம் பிள்ளையென்றும்
நலமாகக் கொடியென்றுங் குடநீரென்றும்
இன்னிலத்தில் சாஸ்திரங்கள் மறைப்பாய்ச்சொன்னர்
இடும்பரெல்லாம் பரிபாஷை தன்னைப்பார்த்து
தன்னிலத்தி லிதுவெல்லா மெடுத்துப்பார்த்துத்
தாட்டிகமா யொன்றுமில்லை அலைகுவாரே. (280)

அலையாமல் வழலையென்ற பேருதானும்
ஆதியாங் கரும்பொன்று அறிந்துபாரு
நிலையான கருவழலை வங்கமாச்சு
நேரான வழலையது தாருசுமாச்சு
கலையான கெந்தகந்தான் வழலையாச்சு
கருத்துறவே யிதைவிட்டு முன்னேசொன்ன
தலையான பிண்டத்தைத் தேடிக்கெட்டுச்
சாஸ்திரங்கள் பொய்யென்பார் தரணியோர்க்கே. (281)

தரணியிலே பொன்னறியா வாதிதானும்
தாட்டிகமாய்ச் செம்புருக்கி மூலிதன்னில்
காணிகமா யுருக்கியே சாய்த்துமேதான்
கனகமது பிறக்குமென்று வெள்ளிதன்னில்
வணிகமாய் மட்டங்கள் சேர்த்துப்பொன்னை
வடிவாக யிடைசேர்த்துத் தகடுதட்டி
தொணியாவில் உப்புடனே காவிசேர்த்துத்
துலங்கவே புடம்போட்டுத் திரிவார்பாரே. (282)

திரிவார்கள் புடம்போட்ட வுடனேதானே
திடமில்லாச் செம்பதுவும் கழன்றுபோகும்
அறியாத படிக்குமே வெள்ளிபின்னே
அடைவாகக் கழன்றுமே போனபின்பு
தெரியாமல் வைத்ததங்க மிறங்கிப்போகும்
திடமில்லை பின்னுமொரு மூலிதேடிப்
பரிகாசம் பண்ணவே திரிவாரப்பா
பகாறியா நிர்மூட வாதிதானே. (283,

தானென்ற நீதியுள்ள வாதிதானும்
தவித்துமே போகாமற் சத்தெடுத்து
ஊனென்ற சத்தைத்தான் செம்பதாக்கி
உறவாக வெள்ளிதனி லுருக்கித்தாக்கிக்
கானென்ற பொன்போலே யிருக்குந்தானே
கடிதான பொன்சேர்த்து லாபமாக
வானென்று யெடுப்பார்கள் புத்தியுள்ளோர்
வடிவாக யாகோபு வகைசொன்னாரே. (284)

வரிசையாய் நூல்பார்த்து வர்மங்கண்டு
வணக்கமென்ன சத்துவகை பிரித்துவாதி
உரிசையா யினங்கண்டு சேர்வைகண்டு
உண்மையாய்ச் சத்துருமித் துருவறிந்து
பரிசையாய்ச் சரக்கினுட பலனறிந்து
பதிவாகச் செம்பெடுப்பார் நயிமாரப்பா
குரிசைதர வெள்ளிதனில் பழுக்கும்நேர்மை
குணமுள்ளோர் செய்துவிடுங் கூறுதானே. (285)

கூறாக யிப்பாகந் தப்பிப்போனால்
குணங்கெட்டுப் போகுமது கூர்ந்துதள்ளு
ஆறாக உடலுக்குள் பஞ்சபூதம்
அதுதப்பில் காயமது அலைந்துபோகும்
நேராக வாதத்துக் கொன்றுதப்பில்
நிர்ணயமாய் வாராது நிலைகொடாது
பேராக வாதியென்று பேரும்பட்டுப்
பிரபலமாய்த் திரிவார்கள் பேயர்தானே. (286)

போது விதி.

தானென்ற யெலுமிச்சம் பழமில்லாட்டால்
தடையற்று அயத்தினுட கசடறாது
வானென்ற கெந்தியது சேராவிட்டால்
வர்ணமது பிறக்காது மார்க்கம்பொய்யாம்
ஊனென்ற வெங்காரம் விட்டாற்கேளு
உயர்ந்துநின்ற இரும்பதுவுஞ் சவுடறாது
பானென்ற சூடனில்லாச் சத்துவெல்லாம்
பதிவாகச் செம்புதான் யெடுபடாதே. (287)

எடுபடாச் சத்தினுடன் பிசறிக்கொண்டு
யேத்தமாய்ச் செம்பு நிறம் யில்லையில்லை
தடுபடாச் செய்துமே கெட்டுப்போச்சு
தாட்டிகமாய்ச் சொல்லியே புலம்புவார்கள்
படுபாவி சொன்னதுதான் பொய்யோவென்பார்
பகரறிது சொல்லார்களென்பார்கோடி
கடுமையா யிப்படிக்குப் புலம்புவார்கள்
கருத்தரியா வாதிக்குச் சொல்லுவாயே. (288)

அயச்செம்பு.

சொல்லவே யின்னமொரு செம்புகேளு
சுருக்காக யிதுலெவுகு முன்னேபாரு
நல்லவே அரபொடியும் பலமும் அஞ்சு
நலமாக யெலுமிச்சம் பழச்சார்விட்டு
கல்லவே நாள்மூன்று ஊறவைத்துக்
கழுவியதைக் கல்வத்திற் போட்டுநீயும்
செல்லவே துருசியது பலமும்ரெண்டு
சீராகப் பத்தாகும் அதனிற்போடே. (289)

போடவே கெந்தியது பத்துஅஞ்சு
பிலமான சூடனது பலமும்பத்து
நாடவே சிகரமது பலமும்அஞ்சு
நன்றாகப் போட்டுமே பழச்சார்விட்டு
காடவே நாளெட்டு அரைத்துவில்லை
கனிவாகத் தட்டியே கதிரில்வைத்து
ஊடவே கிளிஞ்சியென்ற சுண்ணம்கேளு
உறவாக மேனியென்ற சாத்தாலாட்டே. (290)

ஆட்டியே முன்வில்லை கவசங்கட்டி
அருள்பெருக அதின்பேரில் மண்ணுசீலை
நாட்டியே கட்டினபின் சொல்லக்கேளு
நலமாகப் புடம்போட்டு யெடுத்துப்பாரு
கூட்டியே சிவந்துவிடும் முருக்கம்பூப்போல்
குணமாக யெடுத்துமே புரம்பாய்வைத்து
தாட்டிகமாய்க் காரியம் பலமும்நாலு
தடையறவே காண்டிதனி லுருக்கிடாயே. (291)

வங்கசுத்தி.

உருக்கிட்டு ஆட்டமூரி தன்னிலிட்டு
உறவாகப் பதினொருக்கால் உருக்கிச்சாய்க்க
பருக்கிட்டுக் கருநீரு அத்துப்போகும்
பதிவாகக் காண்டிதனில் வைத்துருக்கி
நருக்கிட்டு வெடியுப்பு அஞ்சாங்காய்ச்சல்
நலமாக வங்கயிடை போட்டுக்கிண்டு
கருக்கிட்டு ஒருசாமங் கிண்டக்கிண்டக்
கனமாக மஞ்சள்போ லாகும்பாரே. (292)

ஆகுமே மஞ்சள்தனை உரைத்துநீயும்
அடைவாக வங்கச்செந் தூரமிட்டால்
ஏகுமே உண்ணிரெத்தம் போல்சிவக்கும்
யெடுத்துமே புரம்பாக வைத்துக்கொண்டு
நாகுமே கல்லுப்பு உருக்கக்கேளு
நலமாகக் கல்லுப்பு சேருரெண்டு
ஏகுமே சீனமது சேருரெண்டு
யின்பமாய் பழச்சாரு விட்டுஆட்டே. (293)

ஆட்டியே ரெண்டுகா ளானபின்பு
அடைவாக யெலுமிச்சம் பழச்சார்விட்டு
காட்டியே சேருரெண்டு விட்டுநீயும்
கனிவாகக் கொதியிட்டு ஒட்டக்காய்ச்சி
பாட்டியே கரண்டியிட்டு உலையில்வைத்துப்
பார்த்திட்டு உருக்கிடவே கருத்துநிற்கும்
வாட்டியே பின்னும்நீ குமுறவூது
வடிவாக மஞ்சள்போ லுருகும்பாரே. (294)

உருகின்ற உப்பெடுத்து வைத்துக்கொண்டு
உறுதிபெற முன்வங்கச் செந்தூரத்தில்
அருதியாய் நாலிலொன்று சேர்த்துநீயும்
அடைவாக அன்னத்தா லரைத்துவில்லை
பருதியாய் வில்லைகட்டிக் கதிரில்வைத்து
பதிவாகப் புதுஓட்டில் வைத்துமூடி
கருதியாய்ப் புடமிட்டு யெடுத்துப்பாரு
நலமாகச் சிவப்பாகும் நன்மையாமே. (295)

நன்மையாய்ப் பின்னுமந்தச் செந்தூரத்தை
நாடியே கல்வமிட்டு அரை அன்னத்தால்
திண்மையாய் வில்லைகட்டிக் கதிரில்வைத்துத்
திடமாக நன்றாகக் காய்ந்தபின்பு
தண்மையாய்ப் புதுஅகலில் வைத்துமூடித்
தாட்டிகமாய்ப் புடம்போட்டு யெடுத்துப்பாரு
வண்மையாய் மாதளப்பூ நிறமதாக
வகையாக ஆகமட்டும் புடத்தைப்போடே. (296)

புடம்போட்டு யெடுத்துப்பார் செந்தூரமாகும்
புகலரிய செந்தூரம் புவியிற்றானும்
அடம்போடு யெல்லாமுந் தங்கமாகும்
அடைவாக வகைவிபரம் அறியக்கேளு
நடம்போடு முன்போட்ட அயச்செந்தூரம்
நாலிலொன்று வங்கசெந் தூரத்தோடே
கடம்போட்டுச் சேர்த்துமே கல்வமிட்டுக்
கத்தாழஞ் சோறுதன்னா லரைத்திடாயே. (297)

அரைத்துமே வில்லைகட்டிக் கதிரில்வைத்து
அடைவாகப் புதுஅகலில் வைத்துமூடி
தரைத்துமே புடமிட்டு யெடுத்துக்கொள்ளு
தாட்டிகமாய்க் கல்வமிட்டுத் தன்மைகேளு
கரைத்துமே அன்னமென்ற நீராலாட்டி
கணக்காகப் பனிரெண்டு சாமமாட்டி
வரைத்துமே புடமிட்டு யெடுத்துக்கொள்ள
வாகான குருவாகும் வடிவுமாமே. (298)

வடிவமா யிக்குருவைத் துருசுச்செம்பில்
வாகாக ரெண்டுக்கு ஒன்றுதாக்க
துடிவமாய் நொருங்கியது தூளுமாகும்
துணையாக வெள்ளியெட்டில் ரெண்டுதாக்க
கடிவமா யுருக்கியெடு நாலத்தொன்று
கனிவாகத் தங்கமிட்டு ஊதிப்போட
படிவமாய் மாத்ததுவும் யெட்டதாகும்
பண்பாக நானூறிற் பாலித்தேனே. (299)

பாலித்தேன் வயித்தியமும் யெழுநூற்பாடி
பதிவாக களங்குமுன் னூறுசொன்னேன்
ஆலித்தேன் ரெண்டுமுன் னூறுபாடி
அடைவாக ரெண்டுநூற் றன்பத்தைந்து
சாலித்து ரெண்டுஅன்பத் தஞ்சுதானும்
சரியாகப் பதினாறு பாடித்தேர்ந்து
வாலித்தேன் சுண்ணமென்ற அறுநூற்பாடி
வகையாக யிதுவெல்லாஞ் சுருக்கினேனே, (300)

சுருக்கியே பஞ்சமித்திரம் முன்னூறாகச்
சுருதிபெறத் தண்டகமும் நூத்திப்பத்தாய்
பருக்கியே குகைபாகம் உலையின்பாகம்
பதமாக மித்திரத்தின் பரிசுபாகம்
நெருக்கியே செம்பெடுக்கும் பாகமோடு
நிலையாகத் தங்கமிடும் பாகமெல்லாம்
வருக்கியே புடபாக மிதிலேசொன்னேன்
வடிவாகப் பாடினேன் வண்மைதானே. (301)

வண்மையாய் நபிமாரை வணங்கும்பாகம்
வரிசையுடன் புடமிறங்கு மார்க்கங்கூட
தன்மையாய் மயிலிறகுச் செம்பின்பாகம்
தாட்டிகமாய்ச் சரக்கோடு தன்மைசொன்னேன்
உண்மைமிகக் கண்டதொரு வாதிமார்கள்
உத்தமமே யென்றன்நூ லெல்லாம்பார்த்துத்
தண்மையாய் மனதிலெண்ணிச் செய்வோர்தன்னை
தாட்டிகமாய்ச் சுத்தரச வாதியென்னே (302)

சுத்தரச வாதிதா னென்னூலெல்லாம்
சோதித்துக் களங்குமுதல் செந்தூரங்கள்
முத்தராய்ப் பாகமாய்ச் செய்துகொண்டால்
மூவுலகில் நபிமாராய் முழுதும் வாழ்வார்
நித்தியமாய் நிர்மலமாய் நிறைந்தபோது
நிர்ணயமாய் வாதம்வரும் யாகோபுசொன்னார்
சித்தராய்த் திரிவார்கள் பாக்கியமாவார்
சிறப்பான முன்னூறு முற்றுந்தானே. (303)

முற்றிற்று.

## யாகோபு பதினேழு சாஸ்திரத்தில் ஒன்றான

# பஞ்சமித்திரம் 300-க்கு

# அட்டவணை.



அட்டவணை முற்றிற்று.

